உ

# அருட்புகழ்

(1-10-54 முதல் 8-10-54 வரை
பாடப்பெற்றவை)

ஆசிரியர்:

அருட்கவி - சேதுராமனர்

[நாகை - திரு. P. M. சொக்கநாதம் செட்டியார்
அவர்களால், அவரது காலஞ்சென்ற தந்தையார்
திரு. முத்துராமசாமி செட்டியார் அவர்களின் நினைவு
மலராக வெளியிடப்பட்டது]



ஜுலை—1960

விலை 75 காசு

ஓம்

ஸ்ரீ ஞான குருநாதர் துணை

## *மதுரைப் பரிபூரண

## விநாயகர் திரு எழுகூற்றிருக்கை

ஓரெழுத் தொலியா மோருருக் கொண்டனை ;
இருநிலை யினுமோ ரொலியாய் நின்றனை ;
ஒருகோ டிருசெவி முக்கண் கொண்டே
இருமலை யின்மீ தொருகதை தீட்டினை ;
ஒருமுகப் படுமனத் திருவினை களைய
முச்சுடர்க் கலைசேர் நான்மறை முடிவாம்
மூவெழுத் தினிலீர்த் தீரறி வொளிகூட்
டொருபொரு ளாயினை ; ஒன்றோ டிரண்டு
மூன்றொடு நான்கா மொழியுருக் கொள்ளும்
ஐயா யுதமாற் கருளினை ; நான்முகன்
முக்கர ணத்தால் வழுத்தி யளிக்கும்
இருநங் கையருக் கொருபதி யாயினை ;
ஒன்றோ டிரண்டு மூன்றுநான் கைந்தா
றைந்தொடு நான்குமூன் றிரண்டொன் றுமெனும்
தத்துவங் கடந்தொளிர் சத்திய னாயினை ;
ஒருவழி பற்றி யிருநில வரைப்பின்
மூவே டணைதவிர் நாற்றுறை மருவி
ஐம்புல னொடுக்கி அறுபகை தீய்த்தே
எழுபிறப் பறுப்போர்க் காறந்த முடிவாய்
ஐங்கர நால்வாய் மும்மதக் களிறாய்
இருவகை யிருள்கடி யொருசுடர் மணியே !
நாரையூர் நம்பிக் கௌவைக் கருளல்போல்
பத்திசெய் இரெட்டியப் பட்டியார்க் கருள்செய்
துவாத சாந்தச் சுடர்வெளித் தலமாம்
மதுரைப் பரிபூ ரணவிநா யகனே !
அங்குசம் பாசம் மோதகம் கொம்பேந்
தங்கரத் தவனே ! சங்கரர் சுதனே !
அமுதினு மினியநற் றிருவருள் விருந்தே !
ஒருதலை யிருகண் கைகால் செவிமுந்

*(தொடர்ச்சிக்கு அட்டையின் 3-ஆம் பக்கம் பார்க்க)*

---

* மதுரையில் வைகையாற்றின் கரையில் கோயில் கொண்டுள்ள பரிபூரண விநாயகர் இரெட்டியப்பட்டி அடிகளார்க்கு அருள் செய்தவர்; அவ் விநாயகர்மீது, சுவாமிகளின் அடியார்களுள் ஒருவரும், இப்புத்தகத்தை வெளியிடுவோர்க்கு உற்ற நண்பருமான ஸ்ரீ பாலகவி ஆனத்தூர் M. K. வேங்கடராமனார் அவர்கள் இயற்றியதே இவ்வெழுகூற்றிருக்கை; இது இரதத்தில் பந்தப்படுத்தும் சித்ரகவி வகையைச் சேர்ந்தது.

உ

# அருட்புகழ்

(1-10-54 முதல் 8-10-54 வரை
பாடப்பெற்றவை)

[நாகை, திருச்செங்காட்டங்குடி, திருக்கண்ணபுரம் திருப்புகலூர், மஞ்சட்கொல்லை, சிக்கல், கீழ்வேளூர், எட்டிகுடி, திருவாய்மூர், திருவாரூர், சுவாமிமலை ஆகிய தலப்பாடல்கள் அடங்கியது.]


ஆசிரியர்:

அருட்கவி - சேதுராமனார்



[நாகை - திரு. P. M. சொக்கநாதம் செட்டியார் அவர்களால், அவரது காலஞ்சென்ற தந்தையார் திரு. முத்துராமசாமி செட்டியார் அவர்களின் நினைவு மலராக வெளியிடப்பட்டது.]





ஜுலை—1960


மனுட்சி
பல்லாண்டு
..ன.
பிள்ளை M. A.,
1960.

# பொருளடக்கம்



*வ.சு.செ. இல்லம். 292, லிங்கசெட்டித் தெரு, சென்னை-1. பாடல்கள் 1, 2, 256-இவை மூன்றும் ஷெ சந்நிதியிற் பாடப் பெற்றிருப்பினும் நாகையாதிய தலயாத்திரையுடன் தொடர்பு கொண்டிருப்பதால் ஈண்டு இடம்பெற்றுள்ளன.

| சிவபிரான் | உமை | திருமால் | இலக்குமி | இராமர் | திருப்புகழ் சந்தம் | பதிகங்கள் (விருத்தம்) | தனிவிருத்தங்கள் | வெண்பா | பஃறொடை வெண்பா | கீர்த்தனை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 3 | | | | | |
| | | | | | 1 | | | | | |
| | | 1 | 1 | | | | | | 1 | 1 |
| 11 | | | | | 3 | 11 | | | | |
| | 1 | | | | | | 4 | | 1 | |
| 4 | | | | | 1 | | | | | |
| | | | | | 1 | | | | | |
| | | | | | 5 | | | | | |
| 10 | 1 | | | | 4 | 10 | 1 | | | |
| | | | | | 1 | | | | | |
| 11 | 1 | | | | 1 | 11 | | 1 | | |
| 23 | 4 | | | | 8 | 22 | 1 | 2 | | 2 |
| 11 | 1 | | | | 4 | 11 | | | | 1 |
| 14 | 1 | | | | 7 | 13 | 1 | 1 | | |
| | | 11 | 1 | 1 | | 11 | 1 | | | 1 |
| 11 | 2 | | | | 1 | 11 | | 1 | | 1 |
| 1 | 1 | | | | 5 | | 1 | 1 | | |
| 11 | 1 | | | | 4 | 11 | | 1 | | |
| 12 | 1 | | | | 7 | 12 | 1 | | | |
| 11 | 1 | | | | 4 | 11 | | 1 | | |
| | | | | | 3 | | | | | |
| 1 | 1 | | | | 2 | | 1 | 1 | | |
| 2 | 3 | | | | 5 | | 2 | 2 | | 1 |
| 13 | 1 | | | | 5 | 13 | 1 | | | |
| 146 | 20 | 12 | 2 | 1 | 75 | 147 | 14 | 11 | 2 | 7 |

# அணிந்துரை

கடவுள் அருளே திருமேனியாக வுடையவர். அவர் அங்கு இங்கு எனதபடி எங்கும் நிறைந்து நிற்பவர். அந்தக் கடவுளாகிய அருள்வெளிக்கு உள்ளேதான் அகிலாண்ட கோடிகளெல்லாம் தங்கி உலாவிவருகின்றன. எனவே, மக்களாகிய நாமெல்லோரும் கடவுளாகிய அருட் கடலிலேதான் நீந்தி முழுகி விளையாடிக் கொண்டிருக்கின்றோம். நாம் இருப்பது இறையருளுக்குள்ளேயே. நமக்குள்ளே அருள் பரிபூரணமாய் நிறைந்து ததும்பி வெளியெங்கும் பெருக்கெடுத்தோடுகின்றது.

பட்டப் பகலிலே, உச்சிப் பொழுதிலே, வெட்ட வெளிச்சத்திலே இருக்கும் கோட்டான் பறவை, தன்னைச் சுற்றி இருள் சூழ்ந்திருப்பதாக நினைக்கின்றது. பறந்து விளையாடுவதற்கு வெளிச்சம் இல்லையே என்று நினைத்து வருந்துகின்றது. தன்னை ஒருவன் கல்லால் எறிந்து துன்புறுத்தும்போதும் பறந்து ஓட வழி தெரியாமல் தவிக்கின்றது. கோட்டான் கண்ணிலுள்ள குற்றத்தினாலேயேதான் ஒளி இருளாகத் தெரிகின்றது. அதுபோலவே நம்மில் பலர் நமக்குக் கடவுள் அருள் இல்லையே யென்று வருந்துகின்றோம். ஆபத்துக்களினின்று தப்புவதற்கும், உலகில் இன்பமாக வாழ்வதற்கும் வழிதெரியாமல் தவிக்கின்றோம். நமது உள்ளத்திலே அகங்காரம் நிறைந்திருக்கின்றது. ஆணவமலம் நமது அறிவை மறைத்திருக்கின்றது. ஆகையினாலேயே, பேரின்ப வெள்ளமாகிய அருட்கடலிலே நாம் படிந்திருக்கின்றோம் என்பதை அறியாது தவிக்கின்றோம். நம்முடைய சக்தியாலேயே, நாமே எல்லாவற்றையும் செய்கின்றோம் என்று நினைக்கின்றோம். ஒவ்வொருக்கால் நாம் வெற்றியடைந்து இன்புறும்போது இறையருளால் இது நிகழ்ந்ததென்றுணராமல் நமது ஆற்றலால் இதைப் பெற்றோமென்று எண்ணுகின்றோம். இத்தகைய ஆணவ மலத்தினாலேயே, அகங்காரத்தினாலேயே, நாம் அருளைப் பெறுமல் வருந்துகின்றோம்.

சில பக்தர்கள், தாங்கள் பெரிய ஆபத்துக்களில் சிக்கிக் கொள்ளும்போது, தம்மையே முழுவதும் கடவுளிடத்தில் அர்ப்பணம் செய்துவிட்டுத் தற்செயலை இழந்து நிற்கின்றார்கள். அப்போது அவர்கள் அவ்வாபத்தினின்றும் ஆச்சரியகரமாகத் தப்புவிக்கப் பெறுகின்றார்கள். எல்லாம் இறையின் செயலே என்றுணர்ந்த சிலர் கடவுளின் சந்நிதியில்போய் நின்றவுடன், தம்மை மறந்து கடவுளையே தியானித்து அவரைப் போற்றிசெய நினைந்து தம்வச மிழந்து அருள்வசமாகி நிற்கின்றனர். அப்பொழுது கடவுளின் திருவருள் அவர்களின் வாக்கின்வழியாகப் பாக்களாக வழிந்து பெருகுகின்றது. அப்படி வந்த அருட்பாக்களே திருஞானசம்பந்தர் முதலியோர் திருவாக்கினின்றும் வெளிவந்த தேவாரம் முதலியனவும், அருணகிரிநாதர் பொழிந்த திருப்புகழ் முதலியனவு மாகும்.

## அணிந்துரை

தற்காலத்திலும் இவ்வாறு திருவருள் வசமாகித் தற்போதமிழந்து இறைவழிபாடு செய்யும் இளைஞர்களாகிய இரு ஆளுடைய சகோதரர்கள் "சேது-மணி" என்பவர்கள் உளர். அவர்களுள் இளையாராகிய அருட்கவி S. V. சேதுராமனார் திருவாக்கினின்றும் தேவாரம், திருப்புகழ் போன்ற அருட்பாக்கள் பார்ப்போர்கள் பரவசமாகும்படி, கேட்போரின் செவிகள் தித்திக்கும்படி வெளிவருகின்றன. இங்ஙனம் அவர் தாளம் போட்டுக்கொண்டு பாடும் போதே, அவரது தமையனார் அருள் இசை, S. V. சுப்ரமண்யம் அவர்கள் அவற்றைத் தகுந்த முறையில் ராகம் தாளங்களின் பெயர்களுடன் எழுதிவிடுகின்றார்.

இந்த ஆளுடைய சகோதரர்கள் 1954 அக்டோபர் 2-ஆம் தேதி முதல் 7-ஆம் தேதிவரை நாகப்பட்டினத்திலுள்ள பல கோவில்களிலும், நாகையைச் சுற்றியுள்ள மஞ்சட்கொல்லை, சிக்கல், கீழ்வேளூர், எட்டிகுடி, திருப்புகலூர், திருக்கண்ணபுரம், திருவாரூர், சுவாமிமலை, முதலிய ஸ்தலங்களிலும் சென்று பாடிய 256 அருட்பாடல்கள், பல ராகமெட்டுக்களில் உள்ள அரும் புத்தகமே இது. பக்தர்கள் யாவரும் ஓதிப் பயன்பெறுவதற்குரியது. இந்த ஆளுடைய சகோதரர்கள், நந்தமிழ் நாட்டில் நெடுங்காலம் வாழ்ந்து ஆண்டவன் அருட்பாக்களைப் பாடி, அனைவரையும் அருளாளர்களாகச் செய்விக்குமாறு கடவுள் திருவருளை நாம் கருதுவோமாக!

நாகை, பெருமாள் கோவில் வடக்குவீதி 9-ஆம் நம்பர் வீட்டதிபதியும், நாகைக் கிளைத் தெய்வ நெறிக் கழகத்தின் தலைவருமான ஸ்ரீமான் P. M. சொக்கநாதம் செட்டியாரவர்கள், தமது தகப்பனார் பொ. மு. நா. முத்துராமசாமி செட்டியார் (இருக்கை மிராசுதார்) அவர்களின் ஞாபகார்த்தமாக இப்புத்தகத்தைத் தமது செலவில் அச்சிட்டு உதவுகின்றார். அவர் அன்னையின் அருளால் அரோக திடகாத்திரராக வாழ்வாராக!

இப் பாக்களைப் பாடிய பெருந்தகையாளரும் அவரது தமயனாருமே புருப் பார்த்துத் திருத்தி நமக்கு அச்சிட்டு அளிக்கின்றார்கள்.

செட்டியார் அவர்களும், இத்தொண்டில் ஈடுபட்டுள்ள ஏனையோரும், இந்நூலைக் கற்போரும் இறையருளை நிறையப் பெற்று எண்ணிய எண்ணியாங்கெய்த ஜகந்மாதா அருள் புரிவாராக! இவ்வரிய அருள் நூலுக்கு அணிந்துரையை அடியேன் மூலம் எழுதுவித்துக்கொள்ளும் திருவருளைப் பணிந்து போற்றுகின்றேன்.

**ஸ்வாமி அத்வயானந்த ஸரஸ்வதி,**
திருஈங்கோய்மலை,
7—3—1960.

ஓம்

ஸ்ரீ ஞான குருநாதர் துணை

# பாராட்டுரை

திருவருளே திருமேனியாகக் கொண்டு "வேண்டிய போதடியர் வேண்டிய போகமது வேண்ட வெருதுதவு பெருமா" ளாக விளங்கும் முருகப் பெருமானைத் தரிசித்துத் திருவருள் பெற்றுத் திகழும் அருளிளஞ் செல்வராகிய 'அருட்கவிமணி' திரு. சேதுராமன் அவர்களால் 1-10-54 முதல் 8-10-54 வரை, சோறுடைத் தெனவும், அருட் பேறுடைத் தெனவும் ஆன்றோர் களால் போற்றப் பெறும் சோழ நன்னாட்டில் சிவராஜதானி யெனும் நாகையாதிய 11 தெய்விகத் திருத்தலங்களில் 20 திருக்கோயில் களில் அருளப் பெற்ற 256 அருட்கவிகள் இந்நூலின்கண் மிளிர்கின்றன.

அருட்பொலிவும், பொருட்செறிவும், உளக்கனிவும் கலந்து மணக்கும் அக்கவி மலர்கள் திருப்புகழ்ச் சந்தங்கள், விருந்தப் பதிகங்கள், தனி விருத்தங்கள், வெண்பாக்கள், பஃறொடை வெண்பாக்கள், கீர்த்தனைகள் ஆகிய பா இனங்களில், விநாயகர், முருகர், சிவபிரான், உமையம்மை, திருமால், இலக்குமி, இராமர் ஆகிய மூர்த்தங்களின் தோத்திரங்களாகப் பரிமளிக்கின்றன.

அம்மலர்கள் திருவருளால் மலர்ந்த காலை அமைந்த ராகம், தாளம் முதலியனவும் ஆங்காங்கு குறிப்பிடப் பெற்றுள்ளன. இப்பாடல்களில் பெரும்பகுதி தோன்றுகையில் உடனிருந்து அனுபவிக்கும் பேறு அடியேனுக்கும் திருவருளால் கிடைத்தது என் முன்னோர் செய்தவப் பயனே எனக் கருதுகின்றேன்

திருத்தலங்கள் தோறும் இருந்த நிர்வாகிகள் ஆங்காங்கு தரிசநத்திற்கும், வழிபாட்டிற்கும் வேண்டிய வசதிகளையும், உண வாதிய வசதிகளையும் மிக்க அன்புடன் செய்தமை மிகவும் போற்றற் குரியதாகும். இத்தல யாத்திரைக்குக் காரணமாயிருந்த நாகைத் தெய்வநெறிக் கழகத்தினர்களின் அன்பு சான்ற முன்னேற்பாடுகள் அனைத்தும் மிகவும் பாராட்டற்குரியன.

இந்நூலை அச்சிட்டு வெளியிட முன்வந்த மெய்யன்பர் திரு. சொக்கநாத செட்டியாரவர்கள் பக்தியில் ஊறிய பண்பு மிகுந்தவர்; நாகைத் தெய்வநெறிக் கழகத்தில் நெடுநாளாகப் பங்குகொண் டுழைப்பவர்; தற்போது அக் கழகத்தின் தலைவ ராகத் திகழ்பவர்; என் பெருமதிப்பிற்குரிய அன்பர், நண்பர். அவர் தமது தந்தையார் திரு. முத்துராமசாமி செட்டியாரவர்களின் நினைவுமலராக இந்த அருட்டிரு நூலை வெளியிடுவது தமிழுலகுக் கும், சமய உலகுக்கும் அன்புடன் செய்யும் அருந் திருப்பணி யாகும். அவருக்கும், இந்நூலைப் பயிலும் அன்பர் பலர்க்கும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் எல்லா நலனையும் என்றும் உதவிக் காத்தருள வேண்டுமாக.

**ஆனத்தூர் M. K. வேங்கடராமன்**

**25—3—1960.**

சிவமயம்

# ஆன்றோர் அருள்வாக்கு

## 1. திரு நாகைக் காரோணம் (தேவாரம்)

பண்-குறிஞ்சி (முதல் திருமுறை-சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

1. பெண்ணாண் எனநின்ற பெம்மான் பிறைச்சென்னி
அண்ணா மலைநாடன் ஆரூ ருறையம்மான்
மண்ணார் முழவோவா மாடந் நெடுவீதிக்
கண்ணார் கடல்நாகைக் காரோ ணத்தானே.

திருச்சிற்றம்பலம்

திருவிருத்தம் (4-ஆம் திருமுறை-அப்பர்)

திருச்சிற்றம்பலம்

2. செந்துவர் வாய்க்கருங் கண்ணிணை வெண்ணகைத்
[தேன்மொழியார்
வந்து வலஞ்செய்து மாநடம் ஆட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கடல் நாகைக்கா ரோணமென்றும்
சிந்தைசெய் வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே.

திருச்சிற்றம்பலம்

பண்-கொல்லிக் கௌவாணம் (7-ஆம் திருமுறை-சுந்தரர்)

திருச்சிற்றம்பலம்

3. தூசுடைய அகலல்குல் தூமொழியாள் ஊடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரைஎடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்!
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த
நிறைமறையோர் உறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீர்இன் றெனக்கருள வேண்டும்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே.

திருச்சிற்றம்பலம்

## நாகைத் திருப்புகழ் (அருணகிரி நாதர்)

(தந்யாசி ராகம்-ஆதி தாளம்)

4. விழுதா தெனவே கருதா துடலை
வினைசேர் வதுவே புரிதாக-
விருதா வினிலே உலகா யதமே
லிடவே மடவார் மயலாலே;
அழுதா கெடவே அவமா கிடநா
ளடைவே கழியா துணையோதி-
அலர்தாள் அடியேன் உறவாய் மருவோ
ரழியா வரமே தருவாயே;
தொழுதார் வினைவே ரடியோ டறவே
துகள்தீர் பரமே தருதேவா-
சுரர்பூ பதியே கருணா லயனே
சுகிர்தா அடியார் பெருவாழ்வே;
எழுதா மறைமா முடிவே வடிவே
லிறைவா எனையா ளுடையோனே-
இறைவா எதுதா அதுதா தனையே
இணைநா கையில்வாழ் பெருமாளே.

## நாகை மெய்கண்ட வேலாயுதர் திருப்புகழ்

(மத்யமாவதி-ரூபகம்) (அழகு முத்துப் புலவர்)

5. ஆதவன் எழுந்து சாய நாளது குறைந்து தேய
ஆடலும் ஒடுங்கி ஓய வயதாகும்-
ஆயுளு முடிந்து போக வேவினை நடந்து போக
ஆவியும் அகன்று போக எமதூதர்;
ஈதலை ஒழிந்த பாவி ஓதலை மறந்த பாவி
ஈசனை நினைந்தி டாத அதிபாவி-
ஈனனை நெருஞ்சில் மேவு பாதையில் உருண்டு போக
வேதளரு மந்த வேளை வருவாயே;
தாதவிழ் கரந்தை வாகை நீலமும் அணிந்த மார்ப!
தானவரை வென்ற தோகை மயில்வீரா-
தாரணி அளந்த பாதர் தாரணி அயின்ற வாயர்
தாரணி மடந்தை நேயர் மருகோனே;
நாதமுறு விந்து வாகி ஆரணம் அறிந்தி டாத
நாயக சுயம்ப்ர காச வடிவோனே-
நான்மறை புகழ்ந்து பாடும் ராசத சவுந்த ரீக!
நாகையின்மெய் கண்ட வேல முருகோனே.

## நாகையழகர்

(திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழி—
(ஒன்பதாம் பத்து-2-ஆம் திருமொழி 8)

6. மஞ்சுயர் மாமதி தீண்ட நீண்ட
மாலிருஞ் சோலை மணாளர் வந்தென்
நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நின்று நீங்கார்
நீர்மலை யார்கொல்? நினைக்க மாட்டேன்
மஞ்சுயர் பொன்மலை மேலெ ழுந்த
மாமுகில் போன்றுளர் வந்து காணீர்
அஞ்சிறைப் புள்ளுமொன் றேறி வந்தார்
அச்சோ ஒருவர் அழகியவா.

## 2. திருச்செங்காட்டங்குடி (தேவாரம்)

பண்-பஞ்சமம் (சம்பந்தர்—மூன்றும் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

7 பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள்! பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டுள் அனலேந்தி விளையாடும் பெருமானே.

திருச்சிற்றம்பலம்

(அப்பர்-திருத்தாண்டகம்-ஆறுந் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

8. உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை
உம்பர்மணி முடிக்கணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணியஅந் தணர்க்குமறைப் பொருளைப் பின்னும்
முருகுவிரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும்
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

திருச்சிற்றம்பலம்

# திருச்செங்காட்டங்குடித் திருப்புகழ்

## உபதேசம் பெற

சிந்துபைரவி ராகம்]

9. வங்கார மார்பில்அணி தாரொடுயர் கோட
கொந்தார மாலைகுழல் ஆரமொடு தோள்புரள
வண்காதில் ஓலைகதிர் போலஒளி வீசஇதழ்
மலர்போல-
மஞ்சாடு சாபநுதல் வாள்அனைய வேல்விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசிஉற
வந்தாரை வாரும்இரும் நீர்உறவெ னுசைமயல்
இடுமாதர்;
சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசிஅவர் மாயவலை யோடடியென்
உழலாமற்-
சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயை இருள்
வெந்தோட மூலஅழல் வீசஉப தேசமது
தண்காகில் ஓதிஇரு பாதமலர் சேரஅருள் புரிவாயே;
*சிங்கார ரூபமயில் வாகனந மோநமென
கந்தாகு மாரசிவ தேசிகந மோநமென
சிந்தூர பார்வதிசு தாகரந மோநமென விருதோதை-
சிந்தான சோதிகதிர் வேலவந மோநமென
கங்காள வேணிகுரு வானவந மோநமென
திண்சூரர் ஆழிமலை தூள்படவை வேலைவிடு
முருகோனே;
இங்கீத வேதபிர மாவைவிழ மோதிஒரு
பெண்காத லோடுவன வேடிவளி நாயகியை
இன்பான தேன்இரச மார்முலைவி டாதகர
மணிமார்பா-
எண்டோளர் காதல்கொடு காதல்கறி யேபருகு
செங்காடு மேவிபிர காசமயில் மேலழகொ
டென்காதல் மாலைமுடி ஆறுமுக வாஅமரர்
பெருமாளே.

---

* இந்த அடிதான் வள்ளிமலைத் திருப்புகழ்ச் சச்சிதாநந்த சுவாமிகளை முதன்முதலாகத் திருப்புகழில் ஈடுபடச் செய்தது.

## 3. திருக்கண்ணபுரம் - திவ்யப்ரபந்தம்

(பெரியாழ்வார் திருமொழி - 70)

10. உன்னையும் ஒக்கலையிற் கொண்டுதம் இல்மருவி
உன்னொடு தங்கள்கருத் தாயின செய்துவரும்
கன்னிய ரும்மகிழக் கண்டவர் கண்குளிரக்
கற்றவர் தெற்றிவரப் பெற்ற எனக்கருளி
மன்னு குறுங்குடியாய்! வெள்ளறை யாய்!மதில்சூழ்
சோலை மலைக்கரசே! கண்ண புரத்தமுதே!
என்னவ லங்களைவாய்! ஆடுக! செங்கீரை
ஏழுல கும்முடையாய்! ஆடுக! ஆடுகவே!

## நாச்சியார் திருமொழி 4-2

11. காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்ட ராவந்தென் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே.

## பெருமாள் திருமொழி 8-5

12. பாராளும் படர்செல்வம் பரதநம்பிக் கேயருளி
ஆராஅன் பிளையவனோ டருங்கானம் அடைந்தவனே!
சீராளும் வரைமார்பா! திருக்கண்ண புரத்தரசே!
தாராரும் நீண்முடியென் தாசரதீ! தாலேலோ!

## திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி

(எட்டாம்பத்து - எட்டாந் திருமொழி - 1)

13. வானோ ரளவும் முதுமுந்நீர் வளர்ந்த காலம் வலியுருவின்
மீனாய் வந்து வியந்துய்யக் கொண்ட தண்டா
மரைக்கண்ணன்
ஆனா வுருவில் ஆனாயன் அவனை அம்மா விளைவயலுள்
கானார் புறவிற் கண்ணபுரத் தடியேன் கண்டு
கொண்டேனே.

# நம்மாழ்வார் திருவாய்மொழி

பண் - நட்டபாடை] [தாளம் - ஒன்பதொத்து

(ஒன்பதாம்பத்து - பத்தாந்திருமொழி - 7)

14. மெய்யனு கும்விரும் பித்தொழு வார்க்கெலாம்
பொய்யனு கும்புற மேதொழு வார்க்கெலாம்
செய்யில்வா ளைஉக ளுந்திருக் கண்ணபுரத்
தையனு கத்தனைப் பார்கட் கணியனே.

## 4. திருப்புகலூர் (தேவாரம்)

பண் - செவ்வழி - (சம்பந்தர் 2-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

15. ஆணும்பெண் ணும்மென நிற்பரே னும்மர வாரமாப்
பூணுமே னும்புக லூர்தனக் கொர்பொரு ளாயினன்
ஊணும்ஊரார்இடு பிச்சைஏற் றுண்டுடை கோவணம்
பேணுமே னும்பிரா னென்பரால் எம்பெரு மானையே.

திருச்சிற்றம்பலம்

(அப்பர் - திருவிருத்தம் - 4-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

16. ஓணப் பிரானும் ஒளிர்மா மலர்மிசை உத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர நாலைந்துடைத்
தோணற் பிரானை வலிதொலைத் தோன்தொல்லை நீர்ப்புகலூர்க்
கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே.

திருச்சிற்றம்பலம்

பண்-கொல்லி (சுந்தரர் - ஏழாந்திருமுறை)

திருச்சிற்றம்பலம்

17. தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேஎந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதரும் சோறுங் கூறையும்
ஏத்த லாமிடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே.

திருச்சிற்றம்பலம்

## 5. திருப்புகலூர் வர்த்தமானீச்சரம்

பண் - பியந்தைக் காந்தாரம்] [சம்பந்தர் 2-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

18: தொண்டர் தண்கயம் மூழ்கித்
துணையலும் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக்
குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக்
களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர
வர்த்தமா னீச்சரத் தாரே.

திருச்சிற்றம்பலம்

## 6. சிக்கல் (தேவாரம்)

பண் - இந்தளம் (சம்பந்தர் 2-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

19. நீலநெய் தல்நில விம்மல நுஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வளம் மல்கிய சிக்கலுள்
வேலவொண் கண்ணியி னானையொர் பாகன்வெண்
ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழல் ஏத்தநம் பாவம் பறையுமே.

திருச்சிற்றம்பலம்

## சிக்கல் - திருப்புகழ்

(பூரிகல்யாணி - ஆதி)

20. புலவரை ரட்சிக் குந்தாரு வேமது
ரிதகுண வெற்பெொக் கும்பூவை மார்முலை
பொருபுய திக்கெட் டும்போ யுலாவிய புகழாளா-
பொருவரு நட்புப் பண்பான வாய்மையில்
உலகில் உனக்கொப் புண்டோ எனுநல
பொருள்கள் நிரைத்துச் செம்பாக மாகிய கவிபாடி;
விலையில் தமிழ்ச்சொற் குன்போல் உதாரிகள்
எவரென மெத்தக் கொண்டாடி வாழ்வெனும்
வெறிகொள் உலுத்தர்க் கென்பாடு கூறிடு மிடிதீர-

மிகஅரு மைப்பட் டுன்பாத தாமரை
சரணம் எனப்பற் றும்பேதை யேன்றனை
விழியருள் வைத்துக் குன்றாத வாழ்வையு ...வாயே;

இலகிய வெட்சிச் செந்தாம மார்புய
சிலைநுதல் மைக்கட் சிந்தூர வாணுதல்
இமய மகட்குச் சந்தான மாகிய முருகோனே-
இளைய கொடிச்சிக் கும்பாக சாதனன்
உதவும் ஒருத்திக் குஞ்சீல நாயக
எழிலி எழிற்பற் றுங்காய மாயவன் மருகோனே;
அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாமளி இசையாலே-
அழகிய சிக்கற் சிங்கார வேலவ!
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்கார மாடிய பெருமாளே.

## 7. கீழ்வேளூர் (தேவாரம்)

பண் - நட்டராகம் (சம்பந்தர் - 2-ஆந் திருமுறை)
திருச்சிற்றம்பலம்

21. நீரு லாவிய சடையிடை அரவொடு மதிசிர நிரைமாலை
வாரு லாவிய வனமுலை யவளொடு மணிசிலம் பலைவயார்க்க
ஏரு லாவிய இறைவன துறைவிடம் எழில்திகழ் கீழ்வேளூர்
சீரு லாவிய சிந்தைசெய் தணைபவர் பிணியொடு வினைபோமே.

திருச்சிற்றம்பலம்

(அப்பர் - திருத்தாண்டகம்-ஆறுந் திருமுறை)
திருச்சிற்றம்பலம்

22. உளரொளியை உள்ளத்தி னுள்ளே நின்ற
ஓங்காரத் துட்பொருள்தான் ஆயி னானை
விளரொளியை விடுசுடர்கள் இரண்டும் ஒன்றும்
விண்ணொடுமண் ஆகாசம் ஆயி னானை
வளரொளியை மரகதத்தின் உருவி னானை
வானவர்கள் எப்பொழுதும் வாழ்த்தி யேத்தும்
கிளரொளியைக் கீழ்வேளு ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே.
திருச்சிற்றம்பலம்

## 8. எட்டிகுடி (திருப்புகழ்)

(நாட்டைக்குறிஞ்சி—ஆதி)

23. ஓங்கும் ஐம்புல னோடே நினைத்தின் பயர்வேனை-
ஓம்பெ றும்ப்ரண வாதி யுரைத்தெந் தனையாள்வாய்;
வாங்கி வெங்கணை சூரர் குலக்கொம் புகடாவி-
வாங்கி நின்றன ஏவி லுகைக்குங் குமரேசா;
மூங்கி லம்புய வாச மணக்குஞ் சரிமானும்-
மூண்ட பைங்குற மாது மணக்குந் திருமார்பா;
காங்கை யங்கறு பாசில் மனத்தன் பர்கள்வாழ்வே-
*காஞ்சி ரங்குடி ஆறு முகத்தெம் பெருமாளே.

## 9. திருவாய்மூர் (தேவாரம்)

பண்-நட்டராகம் (சம்பந்தர்-2-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

24. வெந்தழல் வடிவினர் பொடிப்பூசி
விரிதரு கோவண உடைமேலோர்
பந்தஞ்செய் தரவசைத் தொலிபாடிப்
பலபல கடைதொறும் பலிதேர்வார்
சிந்தனை புகுந்தெனக் கருள்நல்கிச்
செஞ்சுடர் வண்ணர்தம் அடிபரவ
வந்தனை பலசெய இவராணீர்
வாய்மூ ரடிகள் வருவாரே.

திருச்சிற்றம்பலம்

(அப்பர்-திருத்தாண்டகம்-ஆறாம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

25. பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
பதினெண் கணமும் பயிலக் கண்டேன்
நீல நிறமுண்ட கண்டங் கண்டேன்
நெற்றி நுதல்கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்
மாலைச் சடையும் முடியுங் கண்டேன்
வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே.

திருச்சிற்றம்பலம்.

---

* காஞ்சிரங்குடி – எட்டிகுடி.

# 10. திருவாரூர் (தேவாரம்)

பண்-குறிஞ்சி (சம்பந்தர்-திருவிருக்குக் குறள்-1-ஆந் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

26. துன்பந் துடைப்பீர்காள், அன்பன் அணியாரூர்,
நன்பொன் மலர்தூவ, இன்பம் ஆகுமே.

திருச்சிற்றம்பலம்.

(அப்பர்-திருக்குறுந்தொகை-5-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

27. நீரைச் செஞ்சடை வைத்த நிமலனார்
காரொத் தமிடற் றர்கனல் வாயரா
ஆரத் தர்உறை யும்மணி ஆரூரைத்
தூரத் தேதொழு வார்வினை தூளியே.

திருச்சிற்றம்பலம்.

பண்-கொல்லி (சுந்தரர்-ஏழாந் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

28. சக்ரவா ளத்திளம் பேடைகாள் சேவல்காள்
அக்ரமங் கள்செயும் அடிகளா ரூரர்க்கு
வக்ரமில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உக்ரமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே.

திருச்சிற்றம்பலம்

(திருவாசகம்-போற்றித் திருவகவல்-வரிகள் 147,148)

திருச்சிற்றம்பலம்

29. ஆரூர் அமர்ந்த அரசே! போற்றி!
சீரார் திருவை யாறா! போற்றி!

திருச்சிற்றம்பலம்.

## திருவாரூர்த் திருப்புகழ்

(ஹம்ஸாநந்தி-ரூபகம்)

30. நீதானெத் தனையாலும் - நீடுழிக் க்ருபையாகி;
மாதானத் தனமாக - மானாநக் கழல்தாராய்;
வேதாமைத் துனவேளே - வீரா! சற் குணசீலா;
ஆதாரத் தொளியோனே - ஆரூரிற் பெருமாளே.

# 11. சுவாமிமலை

## திருமுருகாற்றுப்படை (நக்கீரர்)

(சுவாமிமலைப் பகுதி)

31. இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலும் உரியன், அதா அன்று;

## திருவேரகத் திருப்புகழ்

(காம்போதி-ஜம்பை) ஐக்கிய நிலை

32. நாவேறு பாம ணத்த பாதார மேநி னைத்து
நாலாறு நாலு பற்று வகையான—
நாலாரும் ஆக மத்தின் நூலாய ஞாந முத்தி
நாடோறும் நான் உரைத்த நெறியாக;
நீவேறெ னாதி ருக்க நான்வேறே னாதி ருக்க
நேராக வாழ்வ தற்குன் அருள்கூர—
நீடார் சடாத ரத்தின் மீதேப ராபரத்தை
நீகாண் எனு அனைச்சொல் அருள்வாயே;
சேவேறும் ஈசர் சுற்ற மாஞாந போத புத்தி
சீராக வேஉ ரைத்த குருநாதா—
தேரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு
தீரா குகா குறத்தி மணவாளா;
காவேரி நேர்வ டக்கி லேவாவி பூம ணத்த
காவார்சு வாமி வெற்பில் முருகோனே—
கார்போலு மேனி பெற்ற மாகாளி வாலை சத்தி
காமாரி வாமி பெற்ற பெருமாளே.

(ஆன்றோர் அருள்வாக்கு முற்றும்)

உ

# அருட்புகழ்

(1—10—54 முதல் 8—10—54 வரை)

சென்னை, 292, லிங்க செட்டித் தெரு, தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் இல்லத்துத்

## திருத்தணிகேசன் சந்நிதி

1—10—54.

### 1. ஏற்றுக்கொள்ளப் பெற

பைரவி ராகம்] [திச்ரஜாதி அடதாளம்

தாந்தாத் தனனாத் தனந்தன தனதான

தோன்றாத் துணையாப் பெருந்துணை புரிவோனே–
  தூங்காச் சுடராய்த் தினந்தினம் எனதூடே;
ஏன்றாட் கொளவாய்த் திடும்பொருள் ஒருநீயே;
  ஈன்றாய்க் கெனைஏற் றிடுங்கடன் நினையாதோ–
சான்றாய்ப் பரிவாய்ப் பெருந்தணி மலைமீதே–
  தாண்டாக் குதியாச் சிகண்டியில் ஒளிர்வோனே;
மூன்றாய்ப் புவிபாற் பரம்பொரு ளெனநாளும்–
  மூண்டார்த் திடுநேர்த் தியுந்திகழ் பெருமானே.

### 2. அருளை வியத்தல்

மாண்டு] [ஆதி

தாத்தன தாத்தன தனதான

தீத்திற லார்த்தபொன் வடிவேலா–
  தீர்த்தமு மூர்த்தியும் அகலாத;
க்ஷேத்திர யாத்திரை சிறு தூரம்–
  சேர்த்திய வாய்ப்பு நின் அருளேதான்;
பாத்திய பாக்கியம் அருள்வோனே–
  பார்ப்பனி பார்ப்பதி சுகுமாரா;
சாத்திர வாக்கிய பரிபாலா–
  சாட்சிய காட்சியர் பெருமானே

2—10—54. நாகப்பட்டினம், நெ. 9, பெருமாள்கோயில் வடக்குத் தெரு, ஸ்ரீ. P. M. சொக்கநாத செட்டியாரவர்கள் இல்லம்.

## 3. உடல்நோய் தீர

வாசஸ்பதி] [ஆதி

தான தய்யனத் தனதான

ஏக தெய்வதப் பொருளோனே-
ஈச! சைவ(ம்)நத் திறையோனே;
தேக அல்லலைத் துணையாலே-
தீர மெய்யருட் புரிவாயே:
போக வல்லியைப் புணர்வோனே-
பூதி செல்வ மிக் குடையோனே;
நாக மல்லிகைப் பொழில்சூழும்-
நாகை நல்லகப் பெருமாளே.

## நாகை ஸ்ரீ சௌந்தரராஜப் பெருமாள் சந்நிதி

### 4. பஃறொடை வெண்பா

(திவ்யப்ரபந்த கானம் போல)

1. சித்தார்தென் சோணாட்டுத் தெய்வத் தலமதாம்
நத்தார் கடல்சூழும் நாகையே—ஒத்தார்
2. இளவழகன் எம்மான் எனதிறைவன் தொண்டர்
உளவழகன் மாமன் உரமார்—துளவழகன்
3. ஆழ்வார்கட் காரா அமுதன் அநவரதம்
ஆழ்வார் கடலலைமே லாரியனுய்ப்—பேழ்வாய்
4. அரவம் துயின்றான் அடியணவும் தண்டை
அரவம் மலிய அழகாய்—அரவமிசை
5. ஆடுஞ் சிறியோன் அடியவர்தம் நெஞ்சகத்தை
நாடும் பெரியோனேழ் நாதசுரம்—பாடும்
6. குழல்வாயான் குன்றைக் குடையாப் பிடித்தோன்
அழல்வாய்ப்பேய்ப் பூதை அலகை—சுழல்வாய்த்
7. துரும்பாய்ச் சுழன்று துடித்துப் பதைக்க
இரும்பார்த்த மார்பம் இடந்தோன்—கரும்பார்ந்த
8. சொல்லி மலர்சூழ் சுரும்பார் குழற்சிவையாள்
வல்லி யிடையாள் மடப்பிடியாள்—கொல்லி

9. உகந்தார்தம் பாகம் உகந்தாள் ஒளிசேர்
முகந்தாள் முளரியாள் மோனம்—இகந்தாள்

10. உமையா ளுடன்பிறந்த ஓணத்தான் ஒற்றை
அமையாளுங் கையழகன் அன்பர்—தமையாள்

11. சவுந்தர வல்லி சகித சமேதன்
சவுந்தர ராஜன் சரோஜ —கவுந்தன்

12. குழகரசன் சேனக் கொடியுடைய கோமான்
அழகரசன் வாழும் அகம்.

## நாகை - ஸ்ரீ சௌந்தரவல்லித் தாயார் சந்நிதி

மாண்டு] [ஆதி

### 5. கீர்த்தனை

பல்லவி

சவுந்தர ராஜரைக் கண்டோம்—மிகத்
தனிப்பர மாநந்தம் கொண்டோம்
சவுந்தர வல்லியைக் கண்டோம்—தனித்
தாப த்ரயங்களை விண்டோம் (சவுந்தர)

அநுபல்லவி

கவுந்தம தாடிய கண்ணன்—தனிச்
சவுந்தரி யத்தவன் திண்ணன்—அன்பர்க்
குவந்தருள் மரகத வண்ணன்—சிவத்
தவந்தரு தாமரைக் கண்ணன் (சவுந்தர)

சரணம்

1. அவந்திகை யணிய துவாரகை
நிவந்தனை யின்றி நயந்தான்
பவந்தவிர் படைக்கல மேந்திப்—பவம்
அவந்தவிர் ஆழியங் கையான் (சவுந்தர)

2. முகுர விமானத்தில் படிமக் கலத்தேரில்
முகுர மலர்மாலை முகுளந் துழாயுடன்
பகிரங்க மாய்ப்பூண்டு கொலுவிருக் கும்பாவை
சகிதசிங் காரனை நிரம்ப அழகியரைச் (சவுந்தர)

3. கலியமுநி பாடிய கடல்தவழ் திருநாகை
வலியவந் தடைந்தான் சீநிவாசப் பெருமான்
மலியரங்க நாதன் நாககன்னிகா தானன்
பொலியத் திருத்தளிக்குள் அழகரசாய்ப் பொலியும்
(சவுந்தர)

## நாகைச் சட்டைநாதர் சந்நிதி

### 6. பதிகம்

காம்போதி (பண் - தக்கேசி) [ரூபகம்

( வஞ்சி விருத்தம்)

பட்டை நீறுமுப்
பட்டைச் சூலமும்
விட்டை வேட்டவர்
**சட்டை நாதரே.**

7
திட்டை தேவனூர்
கொட்டை யூர்கரூர்
வெட்டை யாறிஞர்
சட்டை நாதரே. 2

8
குட்டை வாமனர்
நெட்டை விக்ரமர்
சட்டை சாத்தினர்
சட்டை நாதரே. 3

9
முட்டை காத்திடும்
பெட்டைக் கோழிகள்
குட்டை சார்நகர்ச்
சட்டை நாதரே. 4

10
தட்டை யாழியர்
சட்டை யாக்கையைக்
குட்டை போர்த்திய
சட்டை நாதரே. 5

11
துட்டை யானவர்
மொட்டை மோலியர்
கட்டைப் போக்கினர்
சட்டை நாதரே. 6

12
கட்டை தூக்கிய
மட்டை வேணியர்
எட்டைத் தோளினர்
சட்டை நாதரே. 7

13
மட்டை யாளர்கள்
ஒட்டை ஓய்த்துவர்
எட்டை நாயகர்
சட்டை நாதரே. 8

14
சிட்டை பார்ப்பதி
மொட்டை யார்முலைக்
கட்டைக் கானவர்
சட்டை நாதரே. 9

15
அட்டை நேர்வினை
அட்டை யாற்றினில்
பட்டைப் பூட்டினர்
சட்டை நாதரே. 10

16
முட்டை நேர்பவம்
கெட்டை யாக்கெடச்
சுட்டை நாகையர்
சட்டை நாதரே. 11

நாகை-சட்டைநாதர் கோயில்-பிராகார முருகர் சந்நிதி.

## 17. தல ஆட்சித் திறம் வியத்தல்

புந்நாக வராளி] [ஆதி

தானத் தந்தன தானத்த தத்தன தனதான

காழித் திண்பதி காளாத்ரி கற்பக புரிபோரூர்-
காவைத் தண்டலை காறுட்டு முட்பதி திருவாரூர்;
வீழிப் பொன்றலம் வேதோக்த வித்தக பெருவேளூர்-
வேதக் கண்டியில் மேலாட்சி பற்றிய திறமேதோ;
கோழிக் கொண்டைகொள் காலாட் படைக்கொடி யுடையோனே-
கோலக் கொண்டையிள் கோமாட்டி பத்திநி குணசீலி;
நாழிச் சுண்டொடு காமாட்சி சித்தருள் நகர்வாழ்வே-
நாகைக் கஞ்சுளி நாதேச் சரத்தமர் பெருமாளே.

## 18. ரக்ஷணை பெற

சாரங்கா] [ஆதி

தந்த தாத்தனத் தனதான

கொங்கை மேட்டினிற் குலவாசை-
கொண்ட வேட்டையர்க் குழலூடே;
மங்கை வேட்கையிற் றிரியாதே-
வந்து காத்திரட் சணைதாராய்;
சிங்கை போர்ப்பதித் திருவாளா;
செந்தில் வாய்த்தசற் குருவேலா;
கங்கை போற்றனிக் கடல்நாகைக்-
கஞ்சு ளீச்சரப் பெருமாளே.

## 19. உடலை வெறுத்தல்

தோடி] [சங்கீர்ணத்ரிபுடை

தத்த தத்த தான தத்த தத்த தான தத்த தத்த தான தனதான

மெத்த மெத்தை வீடு சுற்று முற்று மோடு
மிக்க துக்க நாடு சுடுகாடு-
வெட்டி எட்டி நீடு சுட்டெ ரித்த போது
விட்டு விட்டு போன உடலோடு;
சித்த முற்ற ஓடு பற்று முற்ற வீடு
செத்து விட்ட தாயின் வினைவேது?

சிக்கல் மக்கல் வாயில் கக்கல் கக்கு பீளை
திக்கு முக்க லாடு சடமேனே;
முத்த! முத்தி மாது பத்த! முத்தி நாத!
முக்க ணக்கன் மாதி குருநாதா-
முற்பி றப்பி லேது நற்செ யற்செய் தாலு
முற்ற முட்ட நீதி முயல்வோனே;
சத்த சத்த வாரி கத்த வெற்றி மேவு
சத்தி விட்ட மாற! பொழில்நாகைச்-
சட்டை யப்பர் கோயில் சுற்றில் முற்ப்ர கார
சர்க்க பட்ச மேவு பெருமாளே.

நாகை-ஆதி காயாரோகணேச்வரர் சந்நிதி

### 20. சிந்தடி விருத்தம்

ஹரிகாம்போதி] [சுத்தாங்கம்

கரும்பினும் நன்மொழியாள் கணவா!
சுரும்பமர் மென்குழலாள் துணைவா!
குரும்பையின் பொன்முலையாள் குழகா!
அரும்பெனும் வெண்ணகையாள் அழகா!

### 21. ஷை

இரும்பன என்மனதார் இறைவா!
துரும்பினும் உண்மறைவாம் நிறைவா!
விரும்பின பண்மொழிவாய் விழைவாய்!
அரும்புனம் செய்பொழில்சூழ் பதியாய்!

### 22. கலி விருத்தம்

ஹரிகாம்போதி] [சுத்தாங்கம்

ஆதிகா ரோணனே! ஆதி புராணனே!
மாதியே! வாணனே! மாகுடக் கோணனே!
ஞாதியே! வாணனே! நாகையில் வாணனே!
ஆதியே! ஜோதியே! ஆரிய! வாழியே!

### 23. அறு சீரடி ஆசிரிய விருத்தம்

ஹரிகாம்போதி] [சுத்தாங்கம்

ஆதிகா ரோணத் தம்மா! அமிருத வல்லித் தாய்க்குப்
பாதியே! சட்டை நாதா! பாகினன் மொழியாள் பங்கா!
வீதிசூழ் சோலை விம்மும் விரிகடல் நாகை மேயாய்!
காதிலோர் பாம்பு பூண்டாய்! கஞ்சுளீச் சரத்து ளாயே!

நாகை ஸ்ரீ ஆதி காயாரோகணேச்வரர் கோயில்
அம்பிகை-இக்ஷு ரஸபாஷணியம்மை சந்நிதி

## 24. பஃறொடை வெண்பா

கேதார கௌளம்] [சுத்தாங்கம்

1. பாகின் இனிக்கும் பழம்நேர் பழமொழியாய்!
வாகின் முடிவாம் வடிவமே!—வாகினியே!
2. ராகினியே! காகினியே! லாகினியே! சாகினியே!
மோகினியே! டாகினியே! மூலமே!—காகி
3. புனையுஞ் சடையாய்! புநிதாய்! வநிதாய்!
வனையுந் தமிழ்மொழிமா லையே—எனையும்
4. மதித்தே அணியுமா தாயே! மயிலே!
துதித்தேனுன் சோதிச் சுடர்.

நாகை-சட்டையப்பர் கோயில் அருகிலுள்ள பஜனை மடத்து
முருகர் சந்நிதி

## 25. ஞாந சங்கம் உற

ஷண்முகப்ரியா] [சதுச்ர மட்டியம்

தத்ததான தனதான தனதான

பத்தியோடு வழிபாடு புரிவார்கள்—
பற்றிலாத சிவயோகர் மகநீயர்;
முத்தி வீடு பெறுமாறு முயல்வார்கள்—
முற்றுஞாந முநிவோர்கள் குழுசேராய்;
சித்தியோடு சிவபோகம் அருள்வேளே—
செட்டியாகி வனமீது திரிபாதா;
சத்திவேல! குமரேச! தமிழாளா—
சட்டை நாதன் மடமேவு பெருமாளே.

நாகை-பெருமாள் கோயில் சந்நிதித் தெரு-
ஸ்ரீ சுந்தர ராஜுலு நாயுடு அவர்களில்லம்.

## 26. அகந்தை கெட

நவரோஸ்] [ஆதி

தனந்தன தானன தனதான

எழுந்தரு ளாயென வினவாமுன்—
இகழ்ந்துரை யாமலென் மனமீதே;
அழுந்ுற மேவிய அருளாளா—
அகந்தை வராமலு னருள்தாராய்;

தழும்பெழ வீசிய தனிவேலா-
சவுந்தர ராஜனின் மருகோனே;
தொழும்படி யாருளம் உறைவோனே-
தொழும்புகழ் வானவர் பெருமாளே.

நாகை-மெய்கண்ட வேலாயுத ஸ்வாமி கோயில் எனும்
குமர கோயில் - விநாயகர் சந்நிதி

## 27. ஞாந சுகம்பெற

ஹரிகாம்போதி] [கண்ட ஜாதி அடதாளம்

தனன தானன தானத் தனதான

குருவு மாயெனை யாளக் கொளுநாதன்-
குழகன் வாழ்தளி சேவித் திடுமாறே;
மருவு நாயனை ஞாநச் சுகமேவ-
வலிய பேரருள் பாலித் தருள்வாயே;
பெரும தாசல மாவத் திரனீயே-
பெரிய நாகையில் வாழ்வுற் றமர்வோனே;
குருகு கோபுர மேவிக் களிகூரும்-
குமர கோயில் கணேசப் பெருமாளே.

முருகர் சந்நிதி

## 28. கருணைத் திறம் வியத்தல்

புந்நாக வராளி] [ஜம்பை

தானனா தானதன தானனா தத்ததன
தானனா தானதன தானனா தத்ததன
தானனா தானதன தானனா தத்ததன தனதான

பாடலே பாடியுனை நாளுமே பத்திசெய
ஞாநமே ஈயநினை வாய்!குகா! ரட்சணைசெய்
பாதனே! யோகசிவ போதனே! கட்டழக!
முருகோனே-
பாசமா நீசவினை சூதனே! பட்டரையில்
மேவுமோர் வேல்வரத! நீதனே! சிற்றிடையர்
பாகனே! வேடர்மகள் மோகனே! அத்திமகள்
மணவாளா;
கூடலே போயரிய ஆலவா யிற்சமணர்
சாலவே நீடுகழு வேறுமா விட்டுரிய
கோயில்போ யாடுநட ராசனு ருக்கினிய
க்விமாலை-

கோதிலா ஞானமொழி யாரமே முத்தமிழி
லோதிவாழ் காழிநகர் வேழமே! செப்பரிய
கோலமே சேவையென ஈகுவாய்! நிறகருணை
யளவோதான்;

ஆடலே யாடிவினை யாடுவாய்! அட்டதிரு
போகனே! பூதியபி ஷேகனே! மிக்கொளிசெய்
ஆகனே! ஆனைமுக ஆகனு ருக்கினைய அழகோனே-
ஆதியே! தோகைமயில் மீதிலே நிர்த்தமிடு
நீதியே! வீரஅயி லாயுதா! தக்ஷனெனும்
ஆளுமோர் கேதனமும் நாடுவாய்! சிட்டர்புகழ்
அறிவாளா;

கோடலே சூடுமுரு கேசனே! பத்தர்பணி
தேசனே! ரோகபய நாசனே! மிக்கினிய
கோலனே! சூழடியர் நேசனே! கொக்கலற
விடும்வேலா-

கோபிகா கீதபதி மாமனுய் மெச்சுருக!
கோமளா கார!சிவ ராஜதா னிக்குமர
கோயில்வாழ் ஞானகுரு நாதனே! மெய்த்தவர்கள்
பெருமாளே.

## 29. பாடல் கேட்டருள் எனல்

மாண்டு] [கண்ட ஏகம்

தானத் தனதந் தானத் தனதான

பாடிப் பரவுஞ் சீலர்க் கருள்பாலா-
பாலித் தருளுங் கோலத் தமர்வேலா;
கூடிக் கடையன் கோயிற் கடையுடே-
கூறிக் குழறும் பாடற் செவிகேளாய்;
தேடிக் குருகுங் கேழற் றிருமாலும்-
சேரற் கரியன் சேவித் திடுபோதா;
நாடிப் புகழுந் தூயர்க் கினியோனே-
நாகைக் குமரன் கோயிற் பெருமானே.

## 30. கழல் சேர

ஷண்முகப்ரியா] [ஜம்பை

தனதனன தந்தன தானனத் தனதான

உருவழக! கந்தனே! ஓதிமப் பரியோனே-
'உறுபிரண வஞ்சொலாய்! நீ'யெனக் கிறிபேசா;

மருவுசிகை தண்டியா மாமறைப் பொருள்கூறும்-
வடிவழக! தொண்டனேன் நாயனேக் கழல்சேராய்;
ருவடிவ! குங்குமா கார!சற் குருநாதா-
குமரகுடி நின்றுசேர் கோமளச் சிகியோனே;
திருவருள்செய் தண்டபா ணீ!குறத் திருகேள்வா-
திருவளர்மெய் கண்டவே லாயுதப் பெருமாளே.

உற்சவ முருகர் சந்நிதி

## 31. பிழைக்கும் வழிபெற

ஷண்முகப்ரியா] [மிச்ர த்ரிபுடை

தய்ய தத்த தாத்தனந் தனத்த தனதான

சொல்லிழைத்த பாச்சொலுங் கவிக்கு வரதா!என்-
சொல்லுவப்ப தாய்ப்பரம் பரித்த குறியேனே;
எல்லிழைக்கு வாய்த்திடுந் தனித்த தலைவோனே-
எள்ளலுற்ற பேய்ச்சடம் பிழைக்க வழிகூறாய்;
கல்லிழைத்த வேற்கரம் பிடித்த பெருமானே-
கல்விகற்ற தாற்பயன் பெறச்செய் அருளோனே;
பல்லிழைத்த தீப்பவங் கெடுக்கும் இறையோனே-
பல்விதத்த தாய்ப்பணம் படைத்த பெருமாளே.

நாகை-நடுவதீச்வரர் கோயில்-வாசஸ்பதி விநாயகர் சந்நிதி

## 32. மவுநோபதேசம் பெற

வாசஸ்பதி] [சதுச்ர மட்டியம்

தானத் தனன தானனத் தனதான

பாசப் பிணையி னேடுபட் டலைவேனைப்-
பாலித் தருளு நாளெனக் குளதோதான்;
மோசச் சடல மீதினிற் புகுதாதே-
மோனப் பரம வாசகப் புணைதாராய்;
நாசச் செயலர் நாகையிற் பயில்நாதர்-
ஞானக் கருணை மேருவுக் கொருசேயே;
வாசஸ்பதி இராகமுற் றிசைகேளாய்-
வாசஸ்பதி விநாயகப் பெருமாளே.

## சிவபிரான் சந்நிதி

## நடந தரிசநம் வேண்டுதல்

தோடி] [திரிபுடை

33

பதிகம் (அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

வட்டவார் கடல்சூழ் சென்னை மல்லிகேச் சரத் துளீரே!
சிட்டரீர்! திருவா ரூரீர்! சிக்கலீர்! திருவாய் மூரீர்!
முட்டத்தீர்! முருகன் பூண்டி முதுகுன்றுங் கோயில் கொண்டீர்!
**நட்டமே ஆடீர்! நாகை நடுவதீச் சரத்து ளீரே!** 1

34

ஆடகச் செம்பொற் கோயில் அதிகைவீ ரட்டங் கோட்டூர்
ஏடகந் திருவே கம்பம் இலம்பையங் கோட்டூர் வேட்டீர்!
பாடகப் பைம்பொற் பாதப் பஞ்சினுள் கொஞ்சிப் பாட
**நாடகம் ஆடீர்!** நாகை நடுவதீச் சரத்து ளீரே! 2

35

விடமதே உணவா உண்டீர்! வேங்கையம் புலித்தோல் கொண்டீர்!
படமெடுத் தாடும் பாம்பைப் பரிவிலாட் டும்பா சூரீர்!
இடமதா யிருக்கு வேளூர் ஏரகங் கோவல் நின்றீர்!
நடமதே ஆடீர்! நாகை நடுவதீச் சரத்து ளீரே! 3

36

கர்த்தனெம் பெருமா னென்று கற்றவர் போற்ற நின்றீர்!
வர்த்தமா னீச்ச ரத்தீர்! மதிநதி சடையிற் சூடீர்!
அர்த்தமும் அன்பும் ஆவீர்! அருள்நெறி குறியாத் தந்தீர்!
நர்த்தநம் ஆடீர்! நாகை நடுவதீச் சரத்து ளீரே! 4

37

கடனஞ்சை யமுதாக் கொண்டீர்!
காறட்டு முள்ளூர் கண்டீர்!
உடனஞ்சைக் களம்போ யொன்றி
உவப்புறு மறையே விண்டீர்!
மடநெஞ்சை மாற்றும் வாழ்க்கை
மருத்துவன் ஆனீர் போலும்!
**நடநஞ்சற் றுடீர்!** நாகை
நடுவதீச் சரத்து ளீரே! 5

38

பொருத்தமாய்த் திருத்தஞ் செய்து
    பொறுத்தெனை ஆண்டு கொள்ளும்
ஒருத்தனீர்! உமையாள் பங்கீர்!
    உணர்விலும் புணரும் பண்பீர்!
விருத்தமும் வெண்பாச் சந்தம்
    விருப்பினிற் கேட்டீர்! சற்று
நருத்தமே யாடீர்! நாகை
    நடுவதீச் சரத்து ளீரே! 6

39

பயபக்தி யோடும் பாடும்
    பண்பர்கள் அன்பர் பார்க்க
அயவந்தீச் சரமே மேயீர்!
    அரவமுந் தேனும் வேணி
நயமதாய்ச் சூடா நின்றீர்!
    நாடுபஞ் சக்ருத் யாபி
நயமதே ஆடீர்! நாகை
    நடுவதீச் சரத்து ளீரே! 7

40

கணபணா பரணம் பூண்டீர்!
    கயமுகா சுரனைக் கொன்ற
கணபதீச் சரமே புக்கீர்!
    பணகிரீச் சரமே யுற்றீர்!
குணதரேச் சுரமே கொண்டீர்!
    குயிற்பொழிற் புகலூர் தங்கீர்!
தணல்நடம் ஆடீர்! நாகை
    நடுவதீச் சரத்து ளீரே! 8

41

ஆண்டவன் என்றே அன்பர்
    அநுதினம் முழக்கஞ் செய்யப்
பாண்டவர் துணைவ னான
    பண்டரி நாதன் பாங்கர்

காண்டவன் கயிலை சென்று
கண்டருள் காணக் காட்டும்
தாண்டவம் ஆடீர்! நாகை
நடுவதீச் சரத்து ளீரே! 9

42

கூடலே குடியாப் போந்தீர்!
கோளிலி மேவும் பேரீர்!
காடலா லாடாக் காலீர்!
கந்தன்சம் பந்தன் தாதை!
ஓடலால் பிச்சை ஓரீர்!
ஒப்பிலி யப்பன் ஆனீர்!
ஆடலே ஆடீர்! நாகை
நடுவதீச் சரத்து ளீரே! 10

சௌந்தர நாயகியம்மை சந்நிதி

## 43. ஞாந வேட்கை

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

கேதாரகௌளம்] [சுத்தாங்கம்

நடுவர்பூ சித்த நாகை நடுவதீச் சரர்பா கத்திற்
படுவதோர் பாவாய்! மின்னே! பண்ணினேர் மொழியே! [மாவின்
வடுவைநேர் கண்ணீ! மாதா! சவுந்தர வல்லீ! ஞாநங்
கொடுதி!பே ரழகி யம்மாய்! கொலுவிருந் தென்கொல் [கொண்டாய்!

முருகர் சந்நிதி

## 44. புநிதஉடல் பெற

தரங்கிணி] [ஆதி

தான தனன தாத்த தான
தான தனன தாத்த தான
தான தனன தாத்த தான தனதான

ஈன ஜனன மார்த்த தீயன்
மோன மறியொ ணப்பொல் நோயன்
ஏன மதனி னீர்த்த நாயன்

எழுவாரி-

ஏய பிறவி வாய்த்த பேயன்
ஆசை யதிக மாழ்த்து மாயன்
ஈர மனதி லாக்க ராள னெனையாள;
வான விபுதர் போற்று பாத
மான சகிதர் வாழ்த்து போதம்
வாகை யடிய ரேத்து கீதம் அருளாலே-
மாண மிகுதி யேற்று வாழ
நாண மகல நாற்ற மாள
வாச விநுத பாத்ர பூதம் அருள்வாயே;
தீன வரதர் தீர்த்த வேணி
காம தகன மூர்த்தி காம
தேனு வருஷ மூத்ர பாக திருமாது-
தேவன் மகிழ ராட்ச சாதி
சூர நிருதர் மாட்சி யோடு
சேர வெருவ ஆட்சி காண அடுதீரா;
ஞான விரக! க்ஷேத்ர பால!
கான ரஸிக! காத்ர மாய
நாடக வித சூத்ர தாரி பெயரோனே-
நாம கரண கார்த்தி கேய!
சோம கிரண தீர்க்க ரூப!
நாகை நடுவ தீச்ச ரேச! பெருமானே.

## 45. பாத தாமரை பெற

ஹரிகாம்போதி] [ரூபகம்

தனன தானன தானன தனன தானன தானன
தனன தானன தானன தந்ததான
உனது பேரரு ளோதிய மனது பேணிய நீதியர்
உறுதி சால்தவ யோகியர் உம்பராவார்-
உடலி னேடுயிர் நீயென புணர்வி னேடுணர் போதகர்
உருகு மோருள வாளர்கள் அண்டகூடர்;
நினது சேவைகள் காணிய நினைவி னூர்மற வாதவர்
நெடிது பூசனை யாதிய கொண்டுநேயம்-
நிலவு ஞாநியர் மோநியர் கலவி சூழ லுருதவர்
நினையு மாமல ரீவதும் எந்தநாளோ;
புனமில் வாழ்குற மாதொடு வனமில் நீடிய பூதர
புளக பார மளாவிய புண்டரீகம்-

பொலியும் வார்கர! ஆர்கலி அல்ற வேலெறி சேவக!
புரவி மாமயி லூர்ப்வ! புண்டரீகர்;

நனவி லேடுட லேபுணர் கனவி லாதவொர் காரியர்
நணுகு நாரிய ராரியர் நின்றநாகை-

நடுவர் பூசனை பேணிய நடுவர் கோயிலின் மேவிய
நடந பூஷண! வானவர் தம்பிரானே.

## 46. உபதேசம் பெற

பிலஹரி] [கண்ட த்ரிபுடை

தான தனன தானத் தனதான

ஆடி யழகு தோகைப் பரியேறி-
ஆர அமுது பாலித் தருள்கூர;

ஓடி வரும வேளைக் கெனையாள-
ஓகை பெரிது யோசித் துரைகூறாய்;

பாடி தணிகை போரிப் பதிபேரூர்-
பாகை நகர வாசப் பெருமானே;

நாடி நடுவர் பூசைப் புரிசோலை-
நாகை நடுவர் கோயிற் பெருமானே.

நாகை – ஸ்ரீ தக்ஷ விநாயகர் சந்நிதி

## 47. அழகை வியத்தல்

ஹரிகாம்போதி] [ஆதி

தத்த தனதனத் தனதான

பிட்சு புராணசிட் சணவேலன்-
பிக்ஷை விடாதரட் சணர்பாலன்;

முட்சு விதேகமுத் தியமோகன்-
முற்பட மேயலட் சணமேதோ?

இட்சு விபாஷணிக் கினியோனே-
இத்தரை மீதினிற் பெரியோனே;

சட்சு விலோசனச் சரஜாதா-
தட்ச விநாயகப் பெருமானே.

## நாகை -ஸ்ரீ அமிர்தகடேச்வரர்திருக்கோயில் சிவபிரான் சந்நிதி பதிகம்

சுருட்டி] [ஆதி

48

கோதில் பரம்பொருளே! கோயிலின் மேயவனே!
ஞாதி நயந்தவனே! நாகையில் வாழ்பவனே!
மேதியுங் காலனொடு வீழ வுதைத்தவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 1

49

நீதி தழைத்தவனே! நேய மிகுந்தவனே!
சோதி விளக்கினனே! சோக மறுப்பவனே!
வேதியர் மேதையருள் மேவு பெருந்தகையே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 2

50

காதினிற் கந்தருவர் கம்மல் தரித்தவனே!
மாதியெ னும்பெயரோய்! வாகை மலிந்தவனே!
பாதிபெ ணானவனே! பாவம் பழிப்பவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 3

51

சாதி மதங்கடந்த சத்திய நித்தியனே!
வீதியில் விண்ணவர்சூழ் நாகை விழைந்தவனே!
ஓதி யுணர்ந்தவர்கள் உள்ளம் புகுந்தவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 4

52

பூதி யளிப்பவனே! புன்னகை பூப்பவனே!
நாதி மலைமுலையாள் நாயகி நாயகனே!
தீதி லடியவர்கள் சித்த முகந்தவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 5

53

போதி லமர்ந்தவனும் புரிவளைக் கையவனும்
நேதி தெளிந்தறிய நீடிய தீமலையே!
வாதில் வருஞ்சமணர் வாட வதைத்தவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 6

54

ஊதி மலைக்குமரன் ஒற்றை மருப்புடையான்
சேதி தெரிந்துகந்த தாதை யெனுஞ்சிவனே!
ஏதி இராவணனும் ஏய விதித்தவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 7

55

கோதி விடுங்குழலாள் கோட்டு முலையுமையாள்
ஆதி பரம்பரையாள் அன்பி லணைந்தவனே!
தூதினில் வல்லவனே! தூய பரஞ்சுடரே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 8

56

சூதில் மனத்தவர்சூழ் சோழ வளம்பதியில்
தாதின் மலர்க்கடுக்கை தாங்கிய செஞ்சடையாய்!
ஈதி சிவவசனம் என்றனை யேன்றுகொள்ளீர்
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 9

57

மாதின் மணங்கமழும் மாமலர் வேணியினுய்!
போதிக்கும் புண்ணியனே! புலவர்சொல் கண்ணியனே!
தாதி பணிவிடைசெய் சங்கரி பங்கினனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 10

58

சேதித்துப் பூஅயனைச் சேவிக்கச் செய்தவனே!
ஆதித்த னம்புலியும் ஆட்செயு மாண்டகையே!
சாதித்துன் றன்செயல்கள் தான்செயும் தாண்டவனே!
ஆதி புராணிகனே! அமிர்த கடேச்சுரனே. 11

## ஸ்ரீ அசல குசாம்பிகை சந்நிதி

### 59. துதி (நேரிசை வெண்பா)

பைரவி] [சுத்தாங்கம்

அசல குசாம்பாள் அமிர்த கடேசை
முசலம தேந்திய மோகி—பசலை
இடையாள் எனையாள் இறைவி நிறைவே
உடையாளே உண்டு துணை.

## உத்ஸவ முருகர் திருமுன்

### 60. கடாட்சம் பெற

மாண்டு] [ஆதி

தனன தனத்தனத் தனதான

சமித கடோற்பவப் பெரியோனே-
சதசிவ கோத்திரப் பெருமானே;
ரமித ரதோற்சவத் தவ!பாவ-
ரஹித! கடாட்சமுற் றருள்வாயே;
ப்ரமித சடாட்சரப் பொருளோனே-
ப்ரஸன கடாட்சிசற் குமரோனே;
அமித பராக்ரமத் தழகோனே-
அமிர்த கடேச்சரப் பெருமாளே.

நாகை-ஸ்ரீ காயாரோகணேசுவரர் கோயில்
ஸ்ரீ நாகாபரண விநாயகர் சந்நிதி

### 61. மோகமயல் தீர

தோடி] [மிச்ர ஜம்பை

தானதன தனதானனத் தனதான

ஈனசுர குலகாலனிற் பெரியோனே-
ஏகாதசி விரதாதியர்க் கருளேகன்;
மோனதிப சிவராஜனுக் கினியோனே-
மோகாதிய பவமாயையிற் படல்வீடாய்;
ஞானகர சுரநாயகற் கநுகூலா-
நாகாபுரி வருமானவத் திரவானே;
நானுவித பரிவாரலட் சணநாதா-
நாகாபரண விநாயகப் பெருமாளே.

வெளிப் பிராகார அறுமுகன் சந்நிதி

### 62. புகழ விழைதல்

பூரி கல்யாணி] [ஆதி

தான தானன தானன தானன
தான தானன தானன தானன
தான தானன தானன தானன தனதான

சீலம் ஆள்தரு சீராள சேவக!
கோல நாயக! கோபால கேசவ
தேவ மாதவ தேவாதி தேவனெ நெடுமாயன்-

தீப ஜோதிய கூராழி நாரண
னீப னீல்மணி யாகார மேனிய
சீத ராதீப னுதார மானவ னமையூதி;
நீல மாலைகள் நீடார மார்பினன்
ஆதி கோமள னுகாச தேவர்கள்
நேய மாயிசை தாமோத ரானகன் மருகோனே-
நீடு பார்வளை கூபார மோலிட
வேடை யோடொரு வேலாய்தம் வீசிய
நீப பூஷண் காலாய்த கேதன எனலாமே;
ஆல கால விஷாகார நாயகர்
சூல பாணியர் கோபால லோசன
ரான ஆதி புராணேசர் மாதியர் அதிநீதர்-
ஆர னுகம பூதாதி பூஜிதர்
கோர கோமள வேதாள சேவிதர்
ஆதி மாவடி ஆகீசர் தாதையர் அழகாளர்;
ஞால நாதர்பொ னேரான காயமில்
ஆய நேயர்மெய் ஆரோக ணேசுரர்
ஞான பூரணர் நாகாதி பூஷணர் நவநீதர்-
நாம ரூபகம் யர்தானு மேயிலர்
பால னுகிய ஆருன னு!திரு
நாகை மேவுறு காரோண மேவிய பெருமானே.

ஸ்ரீ நீலாயதாட்சி அம்பிகை சந்நிதி

## 63. கீர்த்தனை (ராகமாலிகை)

[நீலாம்புரி] பல்லவி [சாபு

நீலாய தாக்ஷியே நித்ய கல்யாணியே
நிஜ லக்ஷண சௌந்தரி நீயே (நீலாய)

அநுபல்லவி

ஆலால முண்ட ஆதி புராணேச்வரர்
காலாரி காயா ரோகணேசர் தேவி (நீலாய)

சரணம்

1. கோலா கலமாகக் கொலு விருப்பாயே
நாலாயிரங் கண்ணுலும் நாடிக்கா ணரியதோர்
மேலான திருமேனி அழகி எந்தாயே
வேலாளும் பாலனை யீந்தவள் நீயே (நீலாய)

தந்யாசி]

2. முழுமேனி யழகியே முகமதி கொண்டவளே
எழுகோடி சூரிய அதீத லாவண்யே
அழுதாடல் பாடல் செய்து அன்பர்வந் திறைஞ்சிடும்
புழுகார்த்த பொன்மேனிப் பொன்னொளி
மின்னொளியாய் (நீலாய)

பைரவி]

3. சிவராஜ தானியென்னும் திருநாகை நகரத்தில்
பவரோக நிவாரணி பார்வதி பாவையாள்
யுவராஜ குமாரியாய் உத்தண்ட ப்ரத்யக்ஷ
தவயோக தெய்வமாய்ச் சார்ந்தாளே மாயே (நீலாய)

## 64. தேவியின் சொல்லரிய பெருமை

காம்போதி] பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம் [சுத்தாங்கம்

வேலவனை யீன்றவளும் மூலவனை யீன்றவளும்
மேலான மோன வடிவும்
வேதாந்த போதாந்த நாதாந்த சித்தாந்த
மெய்ஞ்ஞான மான உருவும்
ஓலமிடும் தொண்டர்களை யுடனழைத்துக் காத்தருளும்
ஒப்பிலாக் கருணை நினைவும்
ஓங்கார முதலாகி ஆங்காரம் அழிவாக
ஒருஜோதி வீசு மணியாய்
ஆலதரி சூலதரி காலகரி மூலபர
ஆகாச மேனி யழகும்
ஆனவளே! நாயடியேன் பன்னரிய வுன்பெருமை
அருமைசொல ஆகுமோ சொல்!
நீலநிற மானதிருக் கோல உரு வானதிரு
நீலி! சிவ ஞான நிதியே!
நேரோடஞ் சூழ்நாகைக் காரோண மேவியமர்
நீலாய தாட்சி யுமையே.

உற்சவ நீலாய தாட்சி திருமுன்

## 65. ஆண்டமை கூறல்

கல்யாணி] (வெண்பா) [சுத்தாங்கம்

நீலாய தாக்ஷி நிருமலனைப் பூஜிக்கும்
மேலாய காக்ஷி விளங்கவே - மாலாய்க்
கொலுவிருக்கும் சேவையைக் கண்டுகளி கொண்டேன்
வலுவிலெனை யாண்டாள் வருத்தி.

## ஸ்ரீ காயாரோகணேசுவரர் சந்நிதி

### பதிகம் 1.

காம்போதி] [திரிபுடை

66
மடநாகு போல்வாளுமை
உடனுக மேவாநின்றுர்
விடநாகப் பூணூரிடம்
கடல்நாகைக் காரோணமே. 1

67
குடமாடி கோடாச்சரம்
வடமேரு வாங்காச்சிலை
தடமாடத் தைத்தாரிடம்
கடல் நாகைக் காரோணமே. 2

68
அடயோகம் ஆகாதரும்
திடயோகம் சேர்ந்தாருளம்
இடமாக மேயாரிடம்
கடல்நாகைக்காரோணமே. 3

69
படநாகப் பாயாருடன்
தடநாகந் தானேறுவார்
கடவாமுற் காணூரிடம்
கடல்நாகைக் காரோணமே. 4

70
உடலாகம் உள்ளேவெறும்
சடமாகும் சாகாவிழும்
கடபோகம் கைப்பாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 5

71
நடமாடும் நாகேச்சுரர்
சுடர்வீசும் சோதீச்சுரர்
வடகானம் வாழ்வாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 6

72
அடலாரூர் வாய்மூர்சிக்கல்
குடகோணம் கொட்டைநகர்
குடவாயில் கொண்டாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 7

73
தொடர்பாச பந்தம்பவம்
படராத வண்ணம்பயில்
அடர்சோலை ஆளும்இடம்
கடல் நாகைக் காரோணமே. 8

74
மிடறேடு வேட்டார்விடம்
குடற்சூலை கொன்றுரெட்டுத்
தடந்தோளர் தாம்வாழிடம்
கடல்நாகைக் காரோணமே. 9

75
விடம்வாங்கி உண்டார்
வேங்கைக்
கடமாவின் கார்த்தோல்
போர்த்துக்
கடமாடும் காலாரிடம்
கடல்நாகைக் காரோணமே 10

76
மடவார்கள் மாளிகைசூழ்
மடந்தோறும் மாடம்நெடும்
புடம்செய்த பொன்வைஇடம்
கடல்நாகைக் காரோணமே. 11

### பதிகம் 2.

77
திடலாடி தேஜோன்மயன்
உடலோடே ஒன்றவைகும்
இடர்நீக்கும் எம்மானிடம்
கடல்நாகைக் காரோணமே. 1

78
இடவாய்த்த என்னன்பையே
சுடவாய்த்த துக்கம்சுகம்
கெடவாய்த்த கேள்வன்இடம்
கடல்நாகைக்காரோணமே. 2

79
மடல்கீண்ட தாழைமது
வீடல்வாய்ந்த வாழைக்குலை
படல்சாய்ந்த பாலாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 3

80
புடல்பாகல் பூசனிக்கும்
வடலார்ந்த தோட்டம்பொழில்
நடவாய்ந்த செய்சூழிடம்
கடல்நாகைக் காரோணமே. 4

81
கடன்வாங்கிக் கெட்டார்களை
உடனேங்க ஒப்பாதவர்
திடன்வாழ்க்கை தேர்ந்தாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 5

82
முடக்கோடு முயலகன்
வடக்கோட வைத்தார்நதி
குடக்கோடி வீழும்இடம்
கடல்நாகைக் காரோணமே. 6

83
இடக்கான தீர்ப்பார்சடச்
சடக்கான சாய்ப்பாரிடம்
படகோட்டி பாய்மரமார்
கடல்நாகைக் காரோணமே. 7

84
விடக்கான விட்டுமேலும்
அடக்காத கோபம்அற
நடக்காத செய்வாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 8

85
சடனாகைக் காரோணமே
கடனாகைக் காரோணமே
கடனாகைக் காரோணமே
கடனாகைக் காரோணமே. 9

86
உடற்பூச்சும் சாந்தும் ஒரு
படப்பூச்சார் பாடத்தந்த
இடபத்தே றீசன்னிடம்
கடல்நாகைக் காரோணமே. 10

87
கடல்நஞ்சைக் கண்டங்
கொண்டார்
கடல்போலுங் கங்கை
மொண்டார்
கடல்சூழ்மண் காப்பாரிடம்
கடல்நாகைக் காரோணமே. 11

**நாகை — ஸ்ரீ நாக நாதர் கோயில்—சிவபிரான் சந்நிதி**

ஆரபி] பதிகம் [ரூபகம்

88
போக சக்தியோர்
பாக மாகவே
மோக மாயினீர்
நாக நாதரே. 1

89
நாக மோலிமேல்
நாக மாமலர்
நாகம் நாட்டினீர்
நாக நாதரே. 2

90
தேக பாதையாம்
ரோக நாசனீர்
மேக வேணியீர்
நாக நாதரே. 3

91
லோக பாலனீர்
சோக சூதனீர்
த்யாக ராஜரீர்
நாக நாதரே. 4

92

பாக தீகனே
சேக ரேசனீர்
யோக சாதனீர்
நாக நாதரே. 5

93

பாக சாதனன்
மூக வேஷணன்
ஆகம் மேயினீர்
நாக நாதரே. 6

94

சூக ராசுரன்
வேக மாய்விழக்
காகம் ஏவினீர்
நாக நாதரே. 7

95

ராக பாஷணீர்
ராக த்வேஷணீர்
நாக பூஷணீர்
நாக நாதரே. 8

96

ஈகம் நாவலம்
பூக மார்பொழில்
வாக நாகையீர்
நாக நாதரே. 9

97

கூகம் கோகிலம்
காகங் கூவிடும்
சாக சாலையீர்
நாக நாதரே. 10

98

ஆகம் ஆடுவீர்
யாக சாலையீர்
நாக பாலைசேர்
நாக நாதரே. 11

## ஸ்ரீ அகிலாண்டேசுவரி சந்நிதி

### 99. கீர்த்தனை

கல்யாணி] பல்லவி [ஆதி

அகிலாண்ட நாயகி ஆனைக்காவி லமர்ந்த
ஐதிக மான தேனே! (அகி)

அநுபல்லவி

முகிலாண்ட சோலைகள் மூசளி யிசைபாட
நகிலாண்ட மாலைகள் நசையளி யிசைபாடும் (அகி)

சரணம்

1. நிகிலாண்ட ஜனனி நித்ய கல்யாணி
துகிலாண்ட துளிய துடியிடை யம்மையே!
குகிலாண்ட கோமள கோகிலமே! ஆரம்
அகிலாண்ட நறும்புகை யூட்டும் அளக பாரே! (அகி)

அநுசரணம்

2. நாகையின் மேவிய நாக நாதர்தம்
நாயகியே! என்னை ஆண்டருள் தாயே!
தோகை மயிலுடைய சுந்தரன் தன்னையும்
சுமுக விநாயகனையும் பெற்றவள் நீயே

பாகை யனையமொழிப் பண்கள்சொல் பாவாய்!
பாவ ரஹிதே! தேவ ஸஹிதே!
வாகையின் கேகையம் அன்ன சாயலாய்!
வாளரவு பூஜித்த தாளரவத் தண்டையாய்! (அகி)

ஷி கோயில் ஷண்முகர் சந்நிதி

## 100. போற்ற விழைதல்

சங்கராபரணம்] [ஆதி

தான தான தான தான தான தான தான தான
தான தான தான தான தனதான

ஈன மான பாவ பாவ
மேவி ஆவி ஓய்வி லாமல்
ஈடு பாடு நீடு நாடு மடையேனென்-

ஏச லாய பாச நீச
வாச நாச தேச தேச
ஈசதாச மோசநாச எனவோதி;

மான நாண மேதி லாது
மாண வீணர் காணல் பேணல்
மாய மாய தீய வீய மகிழ்வோடே-

"வாழி! வாழி! காழி யாள!
கோழி யாள! ஊழி யாள!
வாகை தோகை கேகை யாள!' எனலாமே;

தீன நாத! நார ஜாத!
பாத நீத! பால வேல!
தேவ தேவ! நாவ லூரர் திருவாரூர்த்-

தேச ராஜர் வாச கேசர்
வேத னூரர் ஞான பாலர்
தேடி நாடி யோது பாடல் உடையார்சேய்;

ஞான பாநு வான மோன!
கான பான! கான லோல!
நாக போக சேன யானன் மருகோனே-

நாகை மேவு நாக நாதர்
கோயில் வாயில் மேய சேய!
நாத போத வேத கீதர் பெருமானே

## 101. இறவா நிலைபெற

ஷண்முகப்ரியா] [சதுச்ர மட்டியம்

தான தானன தாத்தனத் தந்ததான

மோக மீறிய கூட்டினைக் கொண்டுநாயேன்—
மூகம் நேரென நாட்டமுற் றுண்டுவாழா;
நாக மாணவ வீட்டினைக் கண்டுபாழாய்—
நால்வர் தோள்மிசை காட்டில்வைப் புண்பதேனோ;
போக பூமியள் பூத்துவற் கொண்டையாளைப்—
போய் விராவிய சீர்த்திபெற் றென்றுபோதா;
நாக வார்பொழில் தோப்படற் கொண்டல்நாகை—
நாக நாதன தீச்சரத் தம்பிரானே.

## 102. புகழ்சொல விழைதல்

தோடி] [ஆதி

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தானதான தானதான தானதான தானதான
தானதான தானதான தனதான

சிக்க லெட்டிகுடி யொக்க மிக்கழகு
புக்க விக்கிரக! தொக்க விக்கிரம
செட்டி யொத்துவளி மெத்த விற்றுவரு
தேவதேவ! நீப!பூப ராஜராஜ! கோல!சீல!
சேய!மாய தேயமாயன் மருகோனே—

பக்க லிக்குமொழி சொற்ற சிற்றிடையர்
பச்சை யிச்சைமயில் செச்சை விச்சைதரர்
பட்டர் சிட்டர்சுரர் பெற்ற பொற்பரசி
பாவைபூவை நாதவேத பாததூளி நேயர்வேணி
பால்வைசால்ப! வேல்வை தோள எனலாமே;

விக்கல் கொக்கிருமல் கக்கல் கக்குகளை
சத்தி குத்துவலி கட்டி விற்பிளவை
வெட்டை கட்குருடு முட்ட மட்செவிடு
மேயதீய வாயநோய்கள் சாயவீய மாயநேயம்
வீடோட வேலை வீசி யருள்வோனே;

நக்க லுற்றகுழை யக்க னக்கணியு
மக்கன் முக்கணவ னிக்கன் மக்கவிழி
நக்கன் மத்தமணி பித்த னித்தரணி

நாடுநீடு வாழஆளு மாதிராஜ தானிநாகை
நாகநாதர் கோயில்மேய பெருமாளே.

## 103. ஆறெழுத்தின் பொருள்பெற

வஸந்தா] [ஆதி

தான தானத்தனத் தனதான

தேக வீணைக்கையிற் றிரியாதே-
சீத பாதாற்புதத் தலமேவ;
வேகம் நீயாட்கொளக் கருதாயோ-
வேல! சாடாட்சரப் பொருள்கூறும்;
மோக ஆரூர்த்தவத் திரவானே-
மூல நீலாட்சிசற் புதல்வோனே;
நாக பூஜார்ச்சனைத் தளிநாகை-
நாக நாதீச்சரப் பெருமாளே.

3-10-54 இரவு-காயாரோகணேசர் கோயில்

ஸிம்மவாஹன ஐந்துமுக விநாயகர் (உத்ஸவர்) திருமுன்

## 104. திருவருள் பெற

ஆரபி] [கண்ட த்ரிபுடை

தந்த தனன தானனத் தனதான

அங்க முருக ஆடலிற் பலபாடல்-
அன்பு பொழிய ஆதரித் தருள்வோனே;
வங்க ஜலதி நாகையிற் பயில்வோனே-
வந்து னருளை யீவதற் கிசையாயோ;
சிங்கம் உரிய வாகனப் பரியாகத்-
தென்படு பில காரியுற் றிவர்வோனே;
பங்கமிலி சகோதரப் பெருமானே-
பஞ்சமுக விநாயகப் பெருமாளே

ஷை கோயில் - ஸ்ரீ சுந்தரவிடங்க த்யாகேசர் சந்நிதி

## 105. துதி (வெண்பா)

தோடி] [சுத்தாங்கம்

அசபா நடனமே ஆடுதியா கேச!
அசபாக் கினியா யமைந்த—அசபா
சுகிர்தமா மந்திரனே! சுந்தரனே! ஞாந
விகிர்தனே! நன்மை விதி.

ஷை கோயில்—மாவடிக்கணபதி சந்நிதி

## 106. விபூதி பெற

செஞ்சுருட்டி] [ஆதி

தானன தனனத் தனதான

ஆரண விநோதக் கலையோடே—
ஆகம புராணப் பொருளாகிப்;
பூரண விவேகத் துறுவோனே-
பூதியை விராவத் தருவாயே;
வாரண படாகைக் குமரோனை—
மாதொடு குலாவச் செயும்வீரா;
வாரண முகேசப் ப்ரபு! நாகை-
மாவடி கணேசப் பெருமாளே.

ஷை கோயில்- உட்பிராகார முருகர் சந்நிதி

## 107. வந்திக்க

ஹரிகாம்போதி] [ஆதி

தானுதான தனந்த தனந்தன
தானுதான தனந்த தனந்தன
தானுதான தனந்த தனந்தன தந்ததான

பாராவார தரங்க நடஞ்செய்தி
யாகே சாதிபர் சுந்தரர் சங்கரர்
பாராஜாரி விடங்கர் பரம்பரர் புண்டரீகர்—
பாதா வாகன நெஞ்சினர் கொஞ்சிய
காயாரோகணர் சம்பு சுயம்புசு
பாஷா வேஷணர் எந்தை பயந்தருள் கந்தவேளே;

ஆராவார மடங்க ஒடுங்கிட
வேலாவேலை தரங்க துரங்கமும்
ஆகா கூகுகு வென்று புலம்பிட அன்றுவேலை—

ஆறுதேயெறி யந்தர சுந்தர
ஞானுகார துரந்தர மந்திர
ஆருதார நிரந்தர என்றுனை வந்தியேனோ;

வீராவீர பயங்கரி சங்கரி
நீலாநீலி புரந்தரி யந்தரி
வேதா வேதியர் தொண்டுசெய் குண்டலி
கண்டநீலி—

வேளா வேளையி லன்பர் புரிந்தருள்
பூஜா ராதனை இன்பி லுகந்தவள்
வீணு பாஷணி யம்பிகை கொஞ்சிய மைந்தனுய்!

தாரா தாரகை மங்கையர் செங்கையி
லோரா ருனன னென்றும் விளங்கிய
தாளா! தாளணி தண்டை சிலம்பொலி
கொஞ்சஆடும்—

தாதா! மேனகை வந்தணை தந்தருள்
பேரா! நாகை யிலங்கிய பண்டைய
சார்கா ரோண முகந்தமர் தொண்டர்கள்
தம்பிரானே.

## 108. காத்தருள வேண்டல்

பூரிகல்யாணி] [ஆதி

தனதன தந்தன தனந்த தந்தன
தனதன தந்தன தனந்த தந்தன
தனதன தந்தன தனந்த தந்தன தந்ததான

திருவிலி நின்றனை நினைந்த நெஞ்சமு
முருகிலி ஒன்றினை உணர்ந்த சிந்தனை
செறிகிலி உன்றனை வணங்கு தொண்டதும்
நன்றுபேணுச்—

செடியனை யென்றனை யுகந்து கொண்டருள்
கருணையெ னென்றுரை புகன்றி டுந்திறல்
தெரிகிலி வஞ்சனை யகன்ற பண்பர்கள்
தொண்டரோடு;

வருகிலி வண்டனை விழைந்த அன்பர்கள்
தரிசனை கண்டிலி மிகுந்த கண்டனை
மடையனை மிண்டனை மகிழ்ந்து கண்களி
கொண்டுகாண-

வழிவகை நன்றுசெய் தெரிந்த உன்செயல்
விழைகிலி மங்கல மலிந்த வந்தனை
மருவிலி யென்பது மறிந்த சங்கதி
வந்துகாவாய்;

கருவினி லுந்திரு பொருந்து பெண்கொடி
குறமகள் குஞ்சரி விடங்க மஞ்சரி
கமழ்புழு கொன்றிய விலங்க லொண்தன
மஞ்சவாது-

கருதி யணைந்தருள் கடம்ப கந்தரி
விடமுடை கந்தரி விடங்க சுந்தரி
கலைமகள் செந்திரு பணிந்த மென்கொலு
நின்றதேவி;

அருவிலி யம்பிகை யனங்க சங்கரி
உருவிலி பைந்தொடி பயந்த நந்தன!
அசபை நடஞ்செய்த விடங்க சுந்தரர்
வந்தநாகை-

அழகு வளம்பதி யமர்ந்த கந்த!நி
னருளை வியந்தவர் தெளிந்த சிந்தையர்
அகமல ரன்புட னுகந்த அண்டர்கள் தம்பிரானே.

## 109. துதி

ஆரபி] [ஆதி

தனனா தத்தா தான தானன
தனனா தத்தா தான தானன
தனனா தத்தா தான தானன தனதான

அமலா நித்யா ஆதி நாயக
குமரா வித்யா வேத போதக
அமரா சத்யா ஆனை யானனர் இளையோனே-

அழகா தத்வா சார பூரண
குழகா சத்வா கார ஆரண
அனகா ப்ரத்யா கார தாரணை விசமாதி;

முமலா சத்தே மாள நீடிய
கருணு சத்தே மூள மூடிய
முடையா பத்தே தீர யோகியர் முயல்போதே-

முருகா கர்த்தா மோன தேசிக
விரகா நிர்த்தா வீர னேயென
மொழியா முத்தா வாவெ னுசொல வருவோனே;

நிமலா பித்தா ஏற தேறிய
விமலா மத்தா வேணி யாய்சுர
நிருபா அத்தா நீயெ னுமொழி யடியாரை-

நினைவால் வைத்தே ஆளு மாதியர்
பரனுர் புத்ரா! பாட லேசுர!
நெடிதா யுற்றுர் நீள மாயவன் மருகோனே;

கமலால் யத்யா கேசர் காசினி
மறவா மற்சீ ரோடு பேணிய
கயிலா யத்தார் காள பூஷணர் கலிகாலர்-

கதிகா ணக்கா ரோண நாயகர்
சிவாரா ஜத்யா கேசர் வாழ்வுறு
கடல்நா கைக்கா ரோண மேவிய பெருமாளே.

## 110. சந்திக்க

வஸந்தா] [திச்ர ஜாதி அடதாளம்

தனதானத் தானனத் தந்ததான

பழிசாடிப் பாமாலைத் தொண்டுபேணிப்-
பவநோயைப் பாராமற் பண்டைமாயைக்;

குழிவீழக் காலாடிக் கொண்டுபோகும்-
குறைதீரக் கோமானிற் சந்தியேனே;

விழிபாலக் காபாலிக் கன்றுபோதம்-
விரிவாகக் கூறுநிற் கின்றவேதா;

கழிபாயக் காவேரிக் கங்கைபோல்சூழ்-
கடல்நாகைக் காரோணத் தம்பிரானே.

ஷை கோயில் ஸ்ரீ நீலாயதாட்சி மூலஸ்தானம்

## 111. காட்சிப் பெருமிதம்

மாண்டு] [ஆதி

1. கண்கொள்ளாக் காட்சியடி இன்று நான்
கண்டதென் னென்று சொல்வேன்
பெண்கொள்ளாப் பித்தனையே பேதை
பெரிது மதித்தனளே.

2. வெள்ளை நகையுடையாள் வெள்ளை மலருடையாள்
வெள்ளை நிறஉடையாள் - அம்மம்மா
வேடிக்கை கண்டேனடி.

3. கம்பையிற் பூசித்த காட்சியுங் காட்டினுள்
அம்பை நீலாய தாட்சி - அம்மம்மா
அடியனுங் கண்டேனடி.

4. கொலுவிருந் தாண்டு கொண்டாள் அவளும்
வலுவி லென்னை யழைத்து - அம்மம்மா
மறக்கவு மாட்டேனடி.

5. என்னென்றிவ் வேழையால் இயம்ப இயலும்
பொன்னென் றிருந்தபொற் காட்சி - அம்மம்மா
புகல இயலாதபடி.

6. நாகைக்கா ரோணர்தம் நாயகி யம்மையாள்
பாகை யனைய மொழியாள் - அம்மம்மா
பார்த்து மகிழ்ந்தேனடி

7. கண்டதை விண்டிடின் கடையனுல் ஆகாதே
தொண்டர்தந் தொன்மை யறிந்தாள் - அம்மம்மா
சூழ இருந்தேனடி.

8. நீலாய தாட்சியின் நெஞ்சைக் கொள்ளைகொள்ளும்
மேலாய காட்சியடி - அம்மம்மா
விளம்பவு மாகாதடி.

9. நாகைக்கே காவலாய் நடுவிருந் தாள்பவள்
ஈகைக்கே பெருநிதி - அம்மம்மா
இயம்பவு மாகாதடி.

10. சொல்லவு மரியதோர் தொல்புக ழாளுமை
கல்லகம் கரைத்தாளடி — அம்மம்மா
காட்சியே சாட்சியடி. (கண்கொள்ளா)

# 2. திருச்செங்காட்டங்குடி

(4—10—54 காலை)

வேண்டு விநாயகர் என்னும் ஸ்ரீ தொண்டர் விநாயகர் கோயில்

## 112. ஆட்கொள வேண்டல்

மத்யமாவதி] [ஆதி

தந்த தனதனத் தனதான

நம்பி களாறிடைப் படலாகி-
நஞ்சன வாழ்வினிற் குதியாதே;
வம்பில் விழாமல்நிற் கடைபாராய்-
வந்தெனை யாளநத் திடுவாயே;
வம்பியை சோலைசூற் றழகூரா-
மந்த்ர புரீசுரர்க் கொருபாலா;
தும்பி கஜானனப் பெருமானே-
தொண்டர் விநாயகப் பெருமாளே.

கணபதீச்சரம்

ஸ்ரீவாதாபி கணபதி சந்நிதி

## 113. பிறவியற

ஹம்ஸத்வனி] [கண்டஜாதி த்ரிபுடை

தானன தனனத் தனதான

நாகீச விநோதத் தமிழ்பாடி-
நானுதி விகாரத் தனைமீள;
யோகீசர் குமாரப் ப்ரபுவே!யான்-
யோகீஜ னெனுமற் க்ருபைதாராய்;
ஆகீச புராதிச் சரவாஸா-
ஆனுத புராணக் கலையோனே;
வாகீசர் பராவிப் பணியூரா-
வாதாபி கணேசப் பெருமாளே.

## ஸ்ரீ கணபதீசுரர் சந்நிதி

### பதிகம்

காம்போதி] [ஐம்பை

114
வேட்டன் புடையார்தங்
கோட்டங் குடிபோனர்
தோட்டந் துரவார்செங்
காட்டங் குடியாரே. 1

115
காட்டங் கனலேந்தி
ஆட்டம் அகலாதார்
கூட்டங் குழுவார்செங்
காட்டங் குடியாரே. 2

116
நாட்டங் கடைபார்த்து
நாட்டந் தருவார்தென்
வேட்டங் குடியார்செங்
காட்டங் குடியாரே. 3

117
ஈட்டம் வளமேய
நீட்டங் கழிபாயத்
தேட்டஞ் செயுலாஞ்செங்
காட்டங் குடியாரே. 4

118
ஊட்டங் குறையாத
பாட்டன் பர்கள்பாட
மாட்டங் கசைவார்செங்
காட்டங் குடியாரே. 5

119
சூட்டன் புடையார்பொன்
சூட்டந் தமிழ்மாலே
கேட்டங் கணிவார்செங்
காட்டங் குடியாரே. 6

120
மாட்டண் புறமேறிப்
யாட்டன் விதிபாடக்
காட்டங் கடையார்செங்
காட்டங் குடியாரே. 7

121
மூட்டம் பிரியாத
சேட்டந் திருநீறு
தோட்டங் கழகார்செங்
காட்டங் குடியாரே. 8

122
தோட்டங் குழையாளர்
தோட்டன் றலர்மாலே
தாட்டன் சடையார்செங்
காட்டங் குடியாரே. 9

123
வாட்டங் கலிதீர
வாட்டண் விழியாள்பால்
ஓட்டங் கையினர்செங்
காட்டங் குடியாரே. 10

124
நாட்டன் சிறுத்தொண்டர்
ஊட்டம் உணவோரா
கோட்டம் புகுந்தார்செங்
காட்டங் குடியாரே. 11

125
தீட்டஞ் சுடர்போலும்
ஓட்டந் துவராள்வெண்
காட்டள் உடையார்செங்
காட்டங் குடியாரே. 12

126
ஆட்டம் பலஆடி
மீட்டங் கமர்போதே
ஓட்டம் பிடிப்பார்செங்
காட்டங் குடியாரே. 13

ஸ்ரீ உத்தரா பதீச்வரர் சந்நிதி

## 127. துதி (அறுசீர் விருத்தம்)

ஸஹாநா] [சுத்தாங்கம்

சீராளன் மகவைப் பெற்ற
சிறுத்தொண்டர் தொண்டு செய்த
ஊராளன் ஒற்றைக் கையில்
ஓட்டினை யேந்தி நின்ற
பேராளன் முநியாய்ப் பிள்ளைக்
கறிவிழை பெரியோன் வேணிக்
காராளன் அவனு ரென்னில்
கணபதீச் சரத் துளானே.

ஷை கோயில் அறுமுகன் சந்நிதி

## 128. பிறப்பு இறப்பற

கல்யாணி] [ஆதி

தாத்தந் தனத்தனன தாத்த தனத்தந்
தாத்தந் தனத்தனன தாத்த தனத்தந்
தாத்தந் தனத்தனன தாத்த தனத்தந் தனதான

தேட்டங் கொடுக்கணைய நீட்ட விழிக்கும்
பூக்கொண்டை கட்டளக காட்டட விக்கும்
தேட்டம் படைத்தஇரு கோட்டு முலைக்கும் தடுமாறித்-
தீக்கும் படக்குழியில் வீழ்த்தி விடத்திண்
டாட்டம் பெருக்கமுற ஆழ்த்தி யழிக்கும்
சீற்றம் தரித்ததனி வேட்கையர் பற்றும் தளராதே;
தோட்டங் குழைச்செவியி னுர்க்குரு குற்றும்
காட்டும் ப்ரமத்தரொடு சேர்க்கைவி டற்கும்
சூட்டும் தமிழ்த்தொடையல் ஏற்று மதித்தும் புனையாநின்-
சூக்ஷமம் புகட்டியருள் ஏட்டை விருப்பம்
பூட்டும் தனிப்பெரிய நாட்கள் வரட்டும்
தூக்கம் பிறக்கம்அற வாய்த்தொரு சற்றென் றணைவாயோ?
பாட்டன் பகைத்திருத ராட்டிர னுக்கும்
பார்க்கும் படிப்பரம காட்சி கொடுத்தும்
பார்த்தன் தனக்கிரதம் ஓட்டும் ஒருத்தன் பணிவாய்மூர்-

பாக்கந் திருக்குவளை யாக்கை யொடுக்கம்
பூக்குண்டை எட்டிகுடி பார்ப்பனர் குப்பம்
பாற்கங்கை சிக்கல்நகர் மூர்த்தியர் முற்றும்
சிவவேடம்;

காட்டன் பருக்குணவ தூட்டுதிருத்தொண்
டாற்றுந் தனிப்பெரியர் நாட்டில் எவர்க்கும்
காப்பென் றெழுக்கமுற வாய்த்த சிறுத்தொண்
டரையாளக்–

காத்தும் பிளைக்கறியை வேட்டரு ளுட்கொண்
டாட்கொண் டளித்தவினை யாட்டர் திருச்செங்
காட்டங் குடிக்கணப தீச்சரம் நிற்கும்
பெருமாளே.

## 129. 'செங்கீரையாடியருள்' எனல்

ஸ்ரீரஞ்சனி] [ஆதி

தந்தான தான தந்தான தான
தந்தான தான தனதான

தொங்கார மார்ப! இந்த்ராதி தேவர்
தொண்டாளர் பாட மகிழ்வோனே–

துண்டீர தேச! வண்டோது நாத!
தொந்தாதி மோசம் அடுவோனே;

தெங்கார மேவு செஞ்சோலை யூடு
செந்தாழை வாழை தழையூரா–

செம்பாக மாக நன்றேத வேடை
செங்கீரை யாடி யருள்வாயே;

கங்காளர் காளி அம்பாச மேதர்
கம்பாந தீசர் கணநாதர்–

கண்டேக பூஜை கொண்டாடு நாதர்
கங்காத ரேசர் சுகுமாரா;

சிங்கார ரூப! சங்கார வேல!
செண்டாய்தம் வீச வடதேசம்–

சென்றுய்! சமீப கும்பா பிஷேக
செங்காடு மேவு பெருமாளே.

## 130. கவலையற

வஸந்தா] [ஆதி

தனத்தந் தாத்தந் தனதன தனதன
தனத்தந் தாத்தந் தனதன தனதன
தனத்தந் தாத்தந் தனதன தனதன தனதான

தருத்தங் கார்ச்செம் பொழில்பல வகையவை
அனிச்சம் பூக்கும் பொழில்பயில் குயிலொடு
தலைச்சங் காட்டங் கருநட மிடுபவ! சிவஞானம்-

தழைக்கும் தேட்டம் தருபவ! பரவெளி
தனிக்கொண் டாட்டம் தழைதர விழைவொடு
சடத்திண் டாட்டம் கலியற மலிதரி சனைகாணக்;

கருத்தும் பாட்டும் களியுடன் அணவிட
நிருத்தங் கூத்தும் புரிபவ! சரவண!
கலைச்செங் கோட்டின் தவமுனி நிகரென மடவாரைக்-

கயக்கும் கூட்டங் தனிலெனை விடுதி! உன்
வியக்கும் பாட்டும் பகர்தர அருளுதி!
கடைக்கண் பார்த்தென் கவலைக ளறஅருள் புரிவாயே;

பொருத்தங் காட்டும் புரிகுழ லுமைபதி
உருத்ரன் சேர்க்கும் பசுபதி கணபதி
புதுக்கொம் பாட்டும் கயமுக அசுரனை அறவீடா-

புதுக்கும் தேக்கும் குருதியு மொழுகிய
கடத்தின் காத்தும் பவமற வழிபடு
புரத்தன் கோட்டன் கணபதி யிறைதரு முருகோனே;

திருத்தெங் கூர்க்கும் திருமலை குருமலை
திருச்செந் தூர்க்கும் தணிமலை பணிமலை
திருப்புன் கூர்க்கும் ப்ரியமுள குருபர கதிர்வேலா-
தினைச்செங் காட்டங் குறைதரு குறமகள்
புனப்பைங் கோட்டின் திரிபவ! பெரியவ!
திருச்செங் காட்டங் குடியுறை யடியவர் பெருமாளே.

## 131. வணங்கும் வரம் பெற

வாசஸ்பதி] [ஆதி

தனத்தந்த தானன தனதான
தந்தாத்த தந்த தனதான

பொறுப்புண்டு நாயேனை யுடனுளப்-
பொன்காட்டு கின்ற புதுவேலா;
மறுப்புண்ட தாமோசொல் மறவாதே-
வந்தேத்து கின்ற வரமீவாய்;
வெறுத்தண்டர் ஓடாமுன் விடம்நேடி-
வெண்காட்டு நங்கை யுடனாகச்;
சிறுத்தொண்டர் சீராளர் தொழுவார்வாழ்-
செங்காட்டில் நின்ற பெருமாளே.

ஷை கோயில் திருகுகுழல் நாயகியம்மை சந்நிதி

## 132. துதி

ஹரிகாம்போதி] [சுத்தாங்கம்

நேரிசை வெண்பா

திருகுகுழல் மாதேவீ! செங்காட்டின் மேயாய்!
பெருகுமுலை யாளே!பெண் பேதாய்!—குருகுநடைத்
தாயே! கணபதி யீச்சரம் சார்ந்தவள்
நீயேதான் நல்ல நிதி.

துவஜஸ்தம்பத்தின்முன் நமஸ்கரித்து நின்று பாடிய முருகர் துதி

ஷண்முகப்ரியா] [ரூபகம்

## 133. மயில்மேல் வருகெனல்

தனத்த தானன தானன தனத்த தானன தானன
தனத்த தானன தானன தனதான

பருத்த மாமுலை யாளொரு குறத்தி தூளித கேளித!
படைத்த மாளிகை சூளிகை பலசூழப்-
பணைத்த கோளிலி மாநகர் இணைத்த சாளிகை சூழ்தரு
பனித்த சோலை அளாவிய பதியாரூர்;
நிருத்த னே!சுர சேனையின் நினைப்பி லேயமர் நாயக!
நிலைத்த மாதிரு வேபெற நினைவாகி-

நெடித்த வேலொடு சேவலும் எடுத்து நீல்மயில் மீதினில்
நிறத்த மாலைகு லாவிட வருவாயே;

ஒருத்த ஞர்உப தேசிகர் விருத்த காசியில் வாழ்பவர்
உலப்பி லாதவர் வேதமென் உடையாளர்-
உருத்தி ராபதி யீசுரர் கணப்ப தீசுரர் காடவர்
உவப்பில் ஆனவர் பேணிய ஒருமாதி;

திருத்து வார்குழ லாளுமை கருத்தில் வாழ்பர மேசுரர்
சிறப்பி ஞர்திரு வாசகம் உடையார்மின்-
திறத்த வேணியர் மூவர்சொல் பெருத்த பாடலர் மேவுறு
சிவத்த காடுறை வானவர் பெருமாளே.

# 3. திருக்கண்ணபுரம்

ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயில்

(4—10—54 இரவு)

சுருட்டி] [ஆதி

பதிகம்

134

கண்ண புரத்தரசே கடிமாமதில் சூழிலங்கை
மண்ணவன் மாமுடிகள் மலை வாகுவும் தூளிசெய்தீர்
விண்ணவர் வேதியர்சூழ் விரை யார்பொழில் வேலைவிம்மும்
தண்ணமர் தென்னகரம் தனிக் கூந்த லழகியரே. 1

135

உண்ண உணவளித்தீர் ஒரு கோடி ரவியொளியீர்
கண்ண புரத்தமர்ந்தீர் கடற் காசினி காத்தருள்வீர்
கண்ணமங்கைத் தலத்தீர் இரு தாமரைக் கண்ணுடையீர்
அண்ணலென அமர்ந்தீர் தனிக் கூந்த லழகியரே. 2

136

கண்ணனென் பேருடையீர் கவி மாலைகள் சூடவல்லீர்
கண்ணமர் மாமதில்கள் புடை சூழ்திருக் கோயிலுள்ளீர்
கண்ணபுரம் உகந்தீர் கடைக் கண்ணருள் நோக்கிடுவீர்
திண்ணமர் சோலையுள்ளீர் தனிக் கூந்த லழகியரே. 3

137

வண்ணமணி யனையீர் மதி மாமுகம் மேவிநின்றீர்
உண்ணவில் ஓசையினீர் ஒரு ஜோதி யழகுடையீர்
கண்ணபுரம் நயந்தீர் கலை காண அரியவரீர்
பெண்ணன மேனியினீர் தனிக் கூந்த லழகியரே. 4

138

வண்ணமுக மதியீர் மதில் மாடங்கள் சூழிலங்கை
நண்ணவன் ஊரெரிக்க ஒரு வானரம் ஏவிநின்றீர்
கண்ணபுரம் உறுவீர் கரைவாரிதி ஓலமிட
ஒண்ணரும் அம்பையெய்தீர் தனிக்கூந்த லழகியரே. 5

139

கண்ணபுரி யுடையாள் திருக் காவி மலர்க்கண்ணினாள்
எண்ணரும் பேரெழிலாள் திரு மார்பிலுகந் திருந்தீர்
கண்ணயி லார்கருடன் துதி செய்யக் கரைந்திருந்தீர்
வெண்ணகை வாயிதழீர் தனிக் கூந்த லழகியரே. 6

140

பண்ணமர் தண்டலைகள் பல பாரெங்கும் ஓங்கிடவே
கண்ணபுரம் இருந்தீர் கடல் நாக மிசைத்துயின்றீர்
திண்ணமர் தோளழகீர் திரு மேனியென்றும் அழகீர்
தண்ணருள் பெய்யவல்லீர் தனிக் கூந்தலழகியரே. 7

141

சுண்ணவெண் சந்தனமும் திகழ் மேனியிற் பூசலுறீர்
கிண்ணங்கொள் பால்திருடி ஒரு கள்வனென் றேவருவீர்
கண்ணனும் ஆகிவிட்டீர் குளக் கரையினிற் கோயில் [கொண்டீர்
கண்ணபுரம் வியந்தீர் தனிக் கூந்த லழகியரே. 8

142

பண்ணரும் பாவமெல்லாம் உடன் பாற்றவும் வல்லரிரோ
மண்ணகம் கண்களித்த ஒரு மாயனு மாகிநின்றீர்
வண்ணருள் ஈயவல்லீர் வசை பேசினும் நீர்பொறுப்பீர்
கண்ணபுரம் உடையீர் தனிக் கூந்த லழகியரே. 9

## 143

கண்ணபுரம் வளர்வீர் தனிக் கூந்த லழகியரே
கண்ணபுரம் வளர்வீர் தனிக் கூந்த லழகியரே
கண்ணபுரம் வளர்வீர் தனிக் கூந்த லழகியரே
கண்ணபுரம் வளர்வீர் தனிக் கூந்த லழகியரே. 10

## 144

புண்ணியம் செய்தவர்கள் வரும் பூமியில் நாடி வந்தீர்
கண்ணியம் மேவிக்கண்டீர் நதி மாகரை யோரம் உள்ளீர்
பண்ணியல் பாடல்சொன்ன பல பக்தரும் போற்ற நின்றீர்
திண்ணிய ஞானம் கொண்டீர் தனிக் கூந்த லழகியரே. 11

### தாயார் சந்நிதி—காளிங்க நர்த்தன அலங்காரக் கொலு

## 145. கீர்த்தனை

மத்யமாவதி] [ஆதி

பல்லவி

கண்ணபுர நாயகி — காளிங்க நர்த்தனக்
காட்சியிற் கொலுவிருப்பாய்! (கண்ண)

அநுபல்லவி

கண்ணனெனக் கண்காணக் காட்சி கொடுப்பவளே!
கண்ணபுரி மாநகரம் கண்டு விழைந்தவளே! (கண்ண)

சரணம்

பெண்ணரசி நீயே பேணுவார் தம் தாயே!
தண்ணருள் செய்திடும் சௌரி ராஜ பார்யே!
வண்ண விமானத்தில் மலர்மாலை பூண்டுகொண்டு
கண்ணகலாக் காட்சிதரும் காரண தேவியே! (கண்ண)

ஸ்ரீராமர் சந்நிதி

### 146. துதி

நீலாம்பரி] [சுத்தாங்கம்

சக்கர வர்த்தித் திருமகனே!
சாலச் சகடம் உதைத்தவனே!
புக்கர வத்தில் நடமாடும்
போதார் பொற்கழற் புண்ணியனே!
மிக்கர வத்துக் கடலிலங்கை
வீடண ருக்கருள் செய்தவனே!
சக்கர மேந்திய பொற்கையனே!
கண்ண புரத்துத் தனிப்பொருளே.

## 4. திருப்புகலூர்

ஸ்ரீ கருந்தாழ் குழலியம்மை சமேத ஸ்ரீ அக்நீசுவரர்
திருக்கோயில் (4-10-54)

பிரதான கணபதி சந்நிதி

### 147. பயமற

நாதநாமக்ரியா] [ஆதி

தனன தனதனத் தனதான

நிதான குணமொடுற் றுணையோத-
நியாய பரவசப் படுவேனாய்;
விதான தரிசனத் தருள்காண-
விசாக சகஜநிர்ப் பயம்ஈவாய்;
சுதான தவமதிற் ப்ரியநாதா-
துழாவு நெடுபொழிற் புகலூரிற்;
ப்ரதான கணபதிப் பெருமானே-
ப்ரகாச சிவமயப் பெருமாளே.

## ஸ்ரீ அக்நீச்வரர் சந்நிதி

## 148. பதிகம்

நவரோஸ்] [ஆதி

குலவன் பருளாற் குறைதீர்க்க
வலவன் மடவாள் மகிழ்வேணி
நிலவன் குறையா நிறைவானன்
புலவன் புகலூர் புகல்வீரே. 1

149

திகழுந் தமிலாச் சிவஜோதி
இகழுண் டலிலா இறையானேன்
நிகழன் புடையான் நெடிதான
புகழன் புகலூர் புகல்வீரே. 2

150

மனிதன் தனையும் மன்றயாலே
சனிதம் புரியாச் சிவமாக்கிச்
செனிதங் களைதரச் சேர்த்தாண்ட
புனிதன் புகலூர் புகல்வீரே. 3

151

கருடன் கொடியா உடையானும்
வருடம் பொழிமா மறையானும்
திருடன் எனவே தெளிந்தாய்ந்த
புருடன் புகலூர் புகல்வீரே. 4

152

கலியன் முருகன் கதிகாண
வலியன் முதலாய் வழிபாடார்
அலியன் பெணுணென் றணியாடைப்
புலியன் புகலூர் புகல்வீரே. 5

153

மெழுகும் அலகும் விழிப்பாக
அழுகும் தொழுகும் அடியார்கள்
எழுகும் புகழார் திருமேனிப்
புழுகன் புகலூர் புகல்வீரே. 6

### 154

மதியன் சடையார் மலர்வேணி
நதியன் வளரும் நலமான 10 x 2)
நிதியன் கருந்தாழ் குழலாள்சேர்
புதியன் புகலூர் புகல்வீரே. 7

### 155

நயவஞ் சகமே நயவாதார்
ஐயகுஞ் சரமே யெனவோதக்
கயவன் கவியுந் தொடைசூடும்
புயவன் புகலூர் புகல்வீரே. 8

### 156

மதுவன் கடுக்கை மலர்மாலை
விதுவன் பணியும் விழைவேணி
பதுமன் திருமால் அறியாத
பொதுவன் புகலூர் புகல்வீரே. 9

### 157

உணர்வன் உலகா யதமெல்லாம்
தணர்வன் தவமோ சிவஞானம்
திணர்வன் சிகிமால் தெளிபூஜை
புணர்வன் புகலூர் புகல்வீரே. 10

### 158

இரவன் இறவா எழில்மோலி
உரவன் அசுரார் உணர்பூசைக்
குரவன் பொழில்சூழ் குருஞான
புரவன் புகலூர் புகலாமே. 11

## 4-அ. திருப்புகலூர் வர்த்தமானீச்சரம்

வர்த்தமானீச்சரர் சந்நிதி

### 159. இறையருள் மேன்மை

நவரோஸ்] அறுசீர் விருத்தம் [ஆதி

வான ளாவு பொழிற்புகலூர் வர்த்த மானீச் சரத்தவனை
ஞான மாது மனோன்மணியாள் நாத னாக நினைந்தவரை
ஈன மான பிறப்பிறவி யேதும் மேவ விலையதனால்
மோன மாக மொழிந்தவரை மூல ஞானம் முயங்குதுமே.

## ஸ்ரீ வர்த்தமானீச்சர முருகர் சந்நிதி

### 160. வாழ்த்துப்பெற

மாண்டு] [ஆதி

தத்தந தாத்தனத் தனதான

நெட்டுலா மூர்த்தியைக் குறியாதே-
நிட்டையே ஆர்த்திடற் கறியாதே;
கட்டுலாம் வாழ்க்கையிற் படுவேனைக்-
கர்த்தனே! வாழ்த்திவைத் தருள்வாயே;
எட்டுலா மூர்த்தமுற் றவீசர்-
இச்சையே காட்டுநற் சிறியோனே;
மட்டுலா மாப்பொழிற் புகலூரில்-
வர்த்தமா னீச்சரப் பெருமாளே.

## ஸ்ரீ மனோந்மநியம்மை சந்நிதி

### 161. காத்தல்பெற

வஸந்தா] [சுத்தாங்கம்

(வெண்பா)

மனோன்மய மாக வளரும் மதியே!
மனோன்மணி மாதே! மயிலே!—கனோன்மணியே!
வர்த்தமா னீச்சரன் வாழும் புகலூரில்
கர்த்தனார் தேவியே! கா.

## ஸ்ரீ கருந்தாழ்குழலம்மை சந்நிதி

### 162. பிறவிநோய் தீர

பைரவி] (வெண்பா) [சுத்தாங்கம்

கருந்தாழ் குழலி! மனோன்மணி! காளப்
பெருந்தாழ் சடையுடைப் பேதாய்!—இருந்தாழ்
சிவயோகம் தேர்ந்த திருவாளர் செல்வீ!
பவரோகம் தீரப் பணி.

## 163. கீர்த்தனை

சங்கராபரணம்] [ஆதி

பல்லவி

சூளிகாம்பிகே! சுந்தராங்கியே!
சொர்ண தேஜோன்மயே! மனோன்மணி! (சூளி)

அநுபல்லவி

காளி காம்பிகே! கருந்தாழ் குழலியே!
தூளிகா மஞ்ச சயனசுக போகே! (சூளி)

சரணம்

1. சூளி காதியும் மாளி காதிசூழ்
சாளி காதிசார் தனமிகு தொன்னகரம்
கேளி தாமணி லளித சோபிதே!
பாளி தாலய அசல குச பாரே! [சூளி)

2. நூலிடை யாளே! நுவலற் கரியதோர்
மேலிடை யாளே! வீர சோபனே!
வேலினும் சேலினும் மேய விழியாய்!
பாலினும் பாகினும் இனித்தபண் மொழியாய்! (சூளி)

3. கோமளா காரக் குருகுநடை யன்னமே!
சாமளா கார மின்னொளிச் சொன்னமே!
யாமளா தேவி! யாகசம் ரக்ஷணி!
ப்ரேமளா தேவி திருப்புக லூர்ராய்! (சூளி)

ஸ்ரீ முருகர் சந்நிதி

## 164. 'மறவேன்' எனல்

வஸந்தா] [ஆதி

தத்த தனந்த தனத்தன தானன
தத்த தனந்த தனத்தன தானன
தத்த தனந்த தனத்தன தானன தனதான

சிக்கல் நிறைந்து செருக்குறு வாழ்வினை
மிக்க அடைந்து தருக்குறு தீவினை
செத்து மறைந்திட உத்தம ஞானமும் உனதாசி-

சித்தம் இரங்கிய சித்திர ஜாலமும்
முத்தி வழங்கவல் பெற்றியும் நேர்மைய
சித்தியும் இன்று கடைக்கணும் நீடிய அருளோடும்;

பக்கல் இருந்துத விக்குவி ராவிய
நற்றுணை யன்பதும் ஒக்க உசாவிய
பத்திமை தொண்டதும் மெத்த நிலாவிய வழியாகப்-

பற்றுனை யன்றி நினைப்பதி லாமலுன்
வெற்றி வியந்துரை செப்பவும் ஆள்தரு
பற்று பிறந்த சுபிக்ஷமும் நாடொறு மறவேனே;

சிக்கல் இலங்கிய சிற்பர ஜோதிய!
முக்கண் நயந்தவர் தக்ஷவி நாயகர்
சிட்டர் தொழும்புசெய் பட்டர் சகோதர! சிகிவீரா-

சித்தசன் முண்டகன் மைத்துன வேளென
நித்தலும் அண்டர்கள் சொற்றருள் பேர்புகழ்
திக்குகள் எங்கணு மிக்குப ராவிட அமர்வோனே;

அக்கன் அலங்க்ருதன் அற்புத மேனியன்;
அக்கணி பஞ்ச சடக்கர வாசகன்
அக்ஷய லிங்கவி லக்ஷண ரூபகன் அமுதேசன்-

அப்பணி செஞ்சடை யப்பன் அமானுஷன்
அக்கினி லிங்கம் எனப்பெய ரோடுற
அப்பர டைந்த திருப்புக லூர்உறை பெருமாளே.

## 165. தரிசநம் பெற

ஷண்முகப்ரியா] [ஆதி

தத்த தானத்தன தத்த தானத்தன
தத்த தானத்தன தனதான

மெத்த ஞானக்கினி சுட்டு வீடாக்கிட
வெற்றி வேலாற்கிளர் தரலாகி-
விச்சை வேருய்ப்பட இச்சை நீருக்கெட
வெக்கை தீராத்தட நடுமூழ்கி;

நித்த மீனாக்ஷியை யுத்த காமாக்ஷியை
நித்ய வாமாக்ஷியை யுருவோடே-
நிற்ப தோர்காக்ஷிகள் சொற்ப மார்சாக்ஷிகள்
நெட்டு காணுத்தரி சனைதாராய்

அத்த பாணீச்சரர் மத்த வேணீச்சரர்
அட்ட கோணேச்சரர் அதிநீதர்-
அர்த்த நாரீச்சரர் வர்த்த மானீச்சரர்
அக்கி நீசேச்சரர் அருள்பாலா;
பத்த ராவார்க்கருள் சித்த னே!கார்த்திகை
பத்நி தாய்மார்க்கருள் புகலூரா-
பட்டர் பாணுச்சுரர் சிட்டர் பூஜேச்சுரர்
பற்றை நேராக்கிய பெருமாளே.

## 166. ஆட்கொள்ளப் பெற

கல்யாணி] [ஆதி

தனன தான தானுதன தனன தான தானுதன
தனன தான தானுதன தனதான

அரக ராசி வாயாவென அறிவி லாத மாமூடர்கள்
அழுது வீழு மாபாவிகள் அவரோடே-
அணுக லாத ஞானோதயம் அதனை யீய மோனுதிப
அரச னுகி நீமாமயில் மிசையேறி;
விரக தாப மேவாதுனை அணையஆசை தான்மீறியும்
விழையும் ஈன நாயேனையும் அணைவாகி-
விதவி தாதி போகாதிகள் அருளி யாளு மாறேயுனை
மிகவி னுவும் ஆதாளியை உடனுள்வாய்;
முரஹ ராவெ னுவானவர் மொழிய மேவு நாராயணர்
முனிவி லாத தாமோதரர் மருகோனே-
முருக நாய னுர்பேணிய பரமர் சூளி காதீசுரி
முருகு மேவு பூமாலையள் பதிசேயே;
விரகி னேடு வாகீசரும் அருவ காய ஆரோகணம்
விரவு மூவர் தேவாரமு மறையாத-
விரிவு சோலை சோணுடுறு புகலி யூர! வேலாயுத!
விழிவ ழாத வானுடர்கள் பெருமாளே.

## 167. சந்நிதி பிரியாத் தவம்பெற

பைரவி] [ஆதி

தனத்தன தானத் தனதான

எருத்தணி ஞானத் தமிழ்மாலே-
இலக்கிய மாகப் பலபாடிக்;
கருத்தணி யாகக் கதருநின்-
கடைத்தலேமேவிக் கிடவேஞே?
மருத்தணி யீசர்க் கொருபாலா-
மணிப்பிர காசச் சுடர்வேலா;
திருத்தணி கேசப் பெருமானே-
திருப்புக லூரிற் பெருமாளே.

# 5. மஞ்சட்கொல்லே

ஸ்ரீ முருகப்பெருமான் திருக்கோயில் (5-10-54)
ஸ்ரீ கணபதி சந்நிதி

## 168. அருட்டுணே அவசியமெனல்

ஆரபி] [ஆதி

தத்தன தனதனத் தனதான

அட்சர லிபிபிழைப் படையாமல்-
அற்புத கவிசொலக் குறையாத;
அட்சய நிதியெனத் துணேநாளும்-
அத்திய அவசியப் பொருளேதான்;
பட்சண பணிகரப் ப்ரியவேளே-
பத்தரை வசியமிட் டருள்வோனே;
ரட்சண கஜமுகப் ப்ரபுநீயே-
லட்சண கணபதிப் பெருமாளே.

ஸ்ரீ உத்ஸவ முருகர் சந்நிதி

## 169. திருவடி தீக்ஷை பெற

நாதநாமக்ரியா] [ஆதி

தான தனதன தந்த தானனத் தனதான

கோல அழகிய குங்கு மாகரத் திருமேனிக்-
கோல! குருபர! குஞ்ச ரீச!உத் ஸவவேளே;
பால! சரவண! அங்கி யாதிரத் தினதாரீ-
பாத வனருகம் என்றன் மாமுடிப் பதிவாயே;
சீலர் அடியவர் வந்து பூசனைத் துறைபேணச்-
சேவை தருபவ! தண்ட பாணிலட் சணரூபா;
ஜால அபிநயம் மன்றி லாடலுற் றமர்வோனே-
சால அழகிய மஞ்சள் மாநகர்ப் பெருமாளே.

ஸ்ரீ முருகர் மூலஸ்தானம்

## 170. துதி

செஞ்சுருட்டி] [ஆதி

தத்ததன தானதத்த தனதான

அக்கமணி மாலையிட்டு சிவபூதி-
அத்தஅபி ஷேகமுற்று பரசேவை;
புக்கசிவ லோகசித்த! விதமான-
புட்பமண மார்கடப்ப மலரோனே;
இக்கனைய வாய்மொழிச்சி எழில்மாது-
இச்சைமகள் போகசத்தி இறையோனே;
மிக்கபொழில் சூழ்அரித்ர புரிவாழ்வே-
வெற்றிவடி வேல்பிடித்த பெருமாளே.

## 171. அருள் வரவு நோக்கல்

செஞ்சுருட்டி] [ஆதி

தய்யன தானன தானன தந்தத்
தய்யன தானன தானன தந்தத்
தய்யன தானன தானன தந்தத் தனதான

பொய்யனை ஊழ்வினை வாழ்வினை நம்பிச்
செய்வதி யாதென வோர்தலு மின்றிப்
புல்லிய ரோடுற வாடிவ ருந்திப் புலையேனுய்ப்-

புல்கிய பேயனை மாயனை நெஞ்சிற்
பல்கிய தீயனை நாயனை நிந்தைப்
பொல்லனை ஏடணை மூடனை வந்தித் தறியாத;
கையனை மோனமும் ஞானமும் இன்றித்
தெய்வதி யானமில் ஈனமதொன்றிக்
கல்வியி லாதக ராளரை யன்றிக் கருதாத-
கள்ளனை யோகியர் சூழலி னின்றுத்
தள்ளு படாவிடும் வேடனை நெஞ்சக்
கல்லக விடனை நீசிறி தென்றுற் றருள்வாயோ;
செய்யன வாகிய சேவைசெய் தொண்டர்க்
கல்லலெ லாம்அற ஞான மருந்தைச்
செய்பவ! பேரரு ளாள!க டம்பைப் புனைமார்பா-
செய்பொழி லாதிய சூழ்தரு குன்டைச்
சைவரை நாவலர் நீடுநெல் மண்டிச்
செல்வமொ டாளொடு போதர முன்சொற் றவர்போதா;
கொய்யன வேல்விழி மாதொரு குன்றச்
செல்விம ணேகர நாயக! சந்தக்
கொல்லியில் ஆசைகொள் கோளிலி யெந்தைப் பெருமானார்-
கொவ்வையி னேரித ழாளுமை நங்கைக்
கையர் குமார! புராதன மஞ்சட்
கொல்லையின் மேவிய கோமள கந்தப் பெருமாளே.

ஷை கோயில் ஸ்ரீ சுந்தரேசுவரர் சந்நிதி

மத்யமாவதி] வினுவுரைப் பதிகம் [திச்ர ஜம்பை

172

மஞ்சள் மாநகரீர்
நெஞ்சுள் மேவிநின்றீர்
பஞ்சின் மெல்லடியாள்
கொஞ்சக் கூடினிரோ? 1

173

தஞ்சம் என்றடைந்தார்
நெஞ்சம் கோயில்கொண்டீர்
மஞ்சள் மாநகரீர்
வஞ்சம் மாய்த்திடீரோ? 2

174

அஞ்சன் அனலூர்தி
கஞ்சன் களிகூர
மஞ்சள் மாநகரீர்
அஞ்சும் ஆயினிரோ? 3

175

கொஞ்சம் புகழ்கூறின்
எஞ்சும் படியாக
மஞ்சள் மாநகரீர்
செஞ்சொல் சேர்த்திடீரோ? 4

176
துஞ்சும் துயர்வாழ்க்கை
அஞ்சும் அடியேனை
மஞ்சள் மாநகரீர்
கெஞ்சுதும் கேட்பீரோ? 5

177
நஞ்சும் களம்நாட்டீர்
மிஞ்சும் புகழ்மேயீர்
மஞ்சள் மாநகரீர்
அஞ்சல் அருளீரோ? 6

178
முஞ்சன் முனைதீர்த்தீர்
மஞ்சன் எனவாழ்வீர்
மஞ்சள் மாநகரீர்
எஞ்சொல் ஏற்றிடிரோ? 7

179
விஞ்சும் விரிவேணி
இஞ்சி எழிலாரும்
மஞ்சள் மாநகரீர்
பஞ்சம் பாற்றிடிரோ? 8

180
நஞ்சை வயல்நாட்டீர்
புஞ்சைப் புனம்சூழும்
மஞ்சள் மாநகரீர்
நுஞ்சம் மதமாமோ? 9

181
வஞ்சி வயலூரீர்
செஞ்சி தில்லையுளீர்
மஞ்சள் மாநகரீர்
மஞ்சட் கொல்லையிரோ? 10

182
மஞ்சள் மணம்பூசும்
மஞ்சின் குழலாள்சேர்
மஞசள் மாநகராம்
மஞ்சட் கொல்லையிரோ? 11

ஷை கோயில், ஸ்ரீ மீனாட்சியம்மை சந்நிதி

## 183. துதி (வெண்பா)

ஆநந்த பைரவி] [சுத்தாங்கம்

மஞ்சின் குழலாய்! மரகத மின்னனையாய்!
பஞ்சினும் மெல்லடிப் பாவாயே!—மஞ்சள்
நகர்வாழும் மீனாட்சீ! ஞானப்பூங் கோதாய்!
புகழ்வார்க்கு நீயே புகல்.

# 6. சிக்கல்

## ஸ்ரீ நவநீதேசுவரர் திருக்கோயில்
## முன் வாயிற் கணபதி சந்நிதி

## 184. மனேலயம் பெற

காதநாமக்ரியா] [ஆதி

தத்தன தானனத் தனதான

சுப்ரச ஞுலயத் தலவாழ்வே—
சுக்ரவ்ர தாதியர்க் கருள்சீலன்;
சுப்ரம ணீசரிற் பெரியோனே—
சுத்தம ஞேலயக் க்ருபைதாராய்;
அப்ரமெ யாதிபத் தழகோனே—
அக்கினி யீசுரர்க் கொருசேயே;
விப்ரந ராயணர்க் கினியோனே—
**விக்நவி நாயகப்** பெருமாளே.

ஸ்ரீ நவநீதேசுரர் மூலஸ்தானம்

காதநாமக்ரியா] [5-10-54] [ஜம்பை

185

முக்கட் கோமானுர்
மக்கட் காமாறே
சிக்கல் தீர்ப்பார்வாழ்
சிக்கல் சேர்வீரே. 1

186

அக்கன் ஆனேறி
சொக்கன் சோணேசன்
நக்கன் நாகேசன்
சிக்கல் சேர்வீரே. 2

187

அக்கன் ஆரூரான்
இக்கன் வாழ்வீர்த்தான்
புக்க சோணுட்டுச்
சிக்கல் சேர்வீரே. 3

188

தக்க தாளஞ்சேர்
பக்க மேளத்தான்
ஒக்க ஆடியூர்
சிக்கல் சேர்வீரே. 4

189

மிக்க மேம்பாட்டால்
துக்கம் சூழோட்டிக்
கொக்கின் கோல்சூடி
சிக்கல் சேர்வீரே. 5

190

மக்க மாயாதி
உக்க ஓர்வாரூர்
பக்கல் பால்நீரார்
சிக்கல் சேர்வீரே 6

191
தக்கன் சார்வேள்வி
சிக்கல் தீராதே
வைக்க வைத்தானூர்
சிக்கல் சேர்வீரே. 7

192
மைக்கண் மாதரார்
கைக்கண் பூண்காட்டி
ஐக்கம் ஆனுன்ஊர்
சிக்கல் சேர்வீரே. 8

193
திக்கின் சேர்சூரார்
கொக்கின் கூர்வீழ்த்த
கைக்கந் தன்தாதை
சிக்கல் சேர்வீரே. 9

194
நக்கும் பூண்நாட்டும்
மைக்கண் டத்தான்ஊர்
பைக்கண் பார்சோலைச்
சிக்கல் சேர்வீரே. 10

195
கக்கல் காமாரி
விக்கல் வேம்நோய்கள்
கைக்கக் காப்பான்ஊர்
சிக்கல் சேர்வீரே. 11

196
வேலொண் கண்ணுளைப்
பாலொன் றெம்மானுர்
சேலொண் சிக்கலே
மேலும் சேர்வீரே. 12

ஷெ கோயில் ஸ்ரீ ஷண்முகர் மூலஸ்தானம்
குமாரசுவாமி சந்நிதி

## 197. பக்திப்ரபாவம் பரவ

மத்யமாவதி] [ஆதி

தத்தத்த தான தான தானத் தனதான

இக்கட்டி ளேடு தீய வாழ்வைக் கழியாதே—
இச்சித்து ஞான பாக மாகத் தெளிவாகப்;
பக்கத்தி லேவி ராவி மாணத் துணைகூறப்—
பக்திப்ர பாவ மேப ராவக் கருதாயோ?
சிக்கற் படாத கேச மாதைப் புணர்வோனே—
சிட்டிப்ர கார! தேவ சேனைக் கினியோனே;
சிக்கற் குலாவு கோயில் மேலைப் பிரகாரச்—
செட்டிக் குமார சாமி நாதப் பெருமாளே.

## 198. துதி (கொச்சகக் கலிப்பா)

ஸ்ரீ சக்த்யாயுதாக்ஷி சந்நிதி

வஸந்தா] [ஆதி

வேலவொண் கண்ணியாய்! மிக்கபே ரழகியாய்!
வேலதனைச் சிங்கார வேலவனுக் கருளியாய்!
பாலவண் னன்நவ நீதனின் பாகமே
கோலவுருக் கொண்டார்த்தாய் தாண்மலர்க்கே கோடியையே.

## ஸ்ரீ சிங்கார வேலவர் சந்நிதி (உத்ஸவ முருகர்)

## 199. பாததாமரை பெற

பூரிகல்யாணி] [ஆதி

தத்தன தனதன தந்தான தானன
தத்தன தனதன தந்தான தானன
தத்தன தனதன தந்தான தானன தனதான

இக்கலி யுகதரு மந்தான் எனுநினை
நித்தலும் நினையா மறந்தார்கள் நாடொறும்
எக்கணம் இடரொடு திண்டாட வேஉனை மறவாதார்—

இத்தரை யதன்மிசை கொண்டாட வேஉற
நத்திய திருவருள் அன்பால் விராவிய
திப்படி திருவுளம் உண்டோசொலாய்திரு விளையாடல்;

புக்கதில் ஒருதிரு பங்கேரு காசனன்
மெய்ப்பொருள் அறியவும் உண்டான சோதனை
பொற்பொடு தனிசெய்து சிண்டோடு மாமுடி
உடன்மோதப்—

புத்திபு கலமுடி செண்டாடு வாய்சிகை
நற்சதுர்சிரமணி பந்தாடு தாண்மலர்,
பொட்டெழ நடமிடு மென்பாத தாமரை அருள்வாயே;

பக்கலில் இருபெரு பெண்டாளு நாயக!
பொற்பழ நியிலொரு பண்டார மாய்இரு
பத்திநி பரவச சம்போக மாதிய துறவாகிப்—

பற்றிய சரவண! கம்பீர வேல்விழி
உத்தமி தருசுத! ஒன்றுன தேவத!
பற்குனன் விஜயனெ னுங்க்ரீடி பூசனை புரிசோலைச்;

சிக்கலில் அழகிய சிங்கார வேல!வ
சிட்டர்முன் வழிபட வந்தோதி யேபிர
திட்டைசெய் திருவெணெய் லிங்கேசர் பாலஷண்
முகலீலா—

சித்திர குருபர! செங்கோல வாமனர்
விட்டுணு மருமக! இந்த்ராணி பேணிய
சிட்டுணு மருமக! இந்த்ராதி தேவர்கள் பெருமாளே.

## 200. ஞான பூரணம் பெறு நாளெதிர் நோக்கல்

ஸஹானா] [ஆதி

தான தந்தன தத்ததன தான
தான தந்தன தத்ததன தான
தான தந்தன தத்ததன தான தந்ததான

நாத விந்தொளி நைட்டிகம தாக
மேவு றுந்தொனி மெத்தஉப கார
ஞான சங்கியை யுற்றுவர மோன புண்டரீக—

நாக குண்டலி மத்தியெழு தாட
போக கண்டன(ம்) மிக்குமனம் நாட
நார தன்சொல்வி சுத்திவரை மேவ அந்தயோகம்;

போத பஞ்சம சஷ்டியவ தார
நாத கிண்கிணி கத்தநட மாடு
போக சம்ப்ரமம் எட்டியிடை யூற தொன்றிலாமல்-

போத ரும்சுதை முட்டியமு தான
மாரி தந்திட மெத்தநுகர் ஞான
பூர ணம்பெற எத்தனை நாள்கள் உண்டுகூறுய்;

தோத கம்பயில் துட்ட அசு ரேசர்
மாள வென்றடு வெற்றிவடி வேல!
சூர சங்கர! கட்டழகு மேவு சண்பையாளீ-

சோக சங்கட துக்கபவ நாச!
மோக மின்கொடி பச்சைமட மாது
தோள ணைந்தருள் இச்சைமயி லேறும் எந்தையாவாய்;

வேத மந்த்ரவ சிட்டர்பெறு காம
தேனு வின்பய புட்கரணி யோடு
வேனெ டுங்கணி யப்பர்நவ நீத லிங்கநாதர்-

வேடை கொண்டயல் புக்குவளர் கோல
வாம னன்திகழ் சிக்கல்நக ருடு
மேவு கின்றதொர் கட்டுமலை மேவு தம்பிரானே.

## 201. அருள் பெற

நாதநாமக்ரியா] [ஆதி

தனந்த தனதன தானத்த தானன
தனந்த தனதன தானத்த தானன
தனந்த தனதன தானத்த தானன தனதான

வரம்பி லிசையுடை வாசிட்டர் பூசைசெய்
இலிங்க வடிவினர் வீபத்து சூடிய
வளைந்த சடையினர் கோபத்தி னேடுமன் மதன்மாள-

மகிழ்ந்து நகைபுரி காளத்தி நாயகர்
நிகழ்ந்த அருளினர் காகுத்த சோதரி
மணந்த விடையினர் ஞானத்தி லூறிய மகநீயர்;

அரம்பை வளர்பொழில் சூழுற்ற கோளிலி
விழைந்த பெரியவர் வேதப்பொன் ஆடையர்
அகந்தை களைபவர் பாணிப்பி னுகியர் அதிருபர்-

அறிந்த புலவர்கள் ஆகத்தில் வாழ்பவர்
சுயம்பு வடிவினர் சோழத்தி ராசனும்
அணிந்த தளியினர் பாலக்கு மார!நின் அருள்தாராய்;

அரம்பை மடமகள் காபித்த சேகரி
நிறைந்த கொலுவமர் காயத்ரி ரூபிணி
அதிர்ந்து நடமிடு சாவித்ரி வேஷணி களநீலி-

அமைந்த அமையன !தோள்பெற்ற வானவி
சமைந்த முகுரம்வி சேடித்த கோயிலில்
அமர்ந்த அழகினள் நீள்சத்தி வேல்விழி உமைசேயே;

நிரம்ப அழகியர் பாடிப்ப ராவிய
சிறந்த தொருபிர பாவப்பு ராணிக!
நெகிழ்ந்த திருவுளம் நீடுற்ற கோமள முருகோனே-

நினைந்த அடியவர் கூடிக்கு லாவிட
வனைந்த கவிமலர் மாலைப்பு யாசல!
நிரம்ப அழகிய ரே!சிக்கல் வாழ்வுறு பெருமாளே.

## 202. சிவயோக வீட்டிற் குடிபுக

செஞ்சுருட்டி] [ஆதி

தனதனத் தத்தத் தனதான

வினையினைச் சுட்டுச் சிவஞான—
வெளியிடைப் பட்டுத் தவயோக;

மனையினைப் பெற்றுக் களிகூர—
வழிவகைச் செப்பித் தருவாயே;

கனைகடற் கச்சிப் பதியோனே—
கடிமணப் புட்பத் தொடையோனே;

நினைவினிற் புக்குத் திகழ்வேலா—
நெடுமதிற் சிக்கற் பெருமாளே.



## 203. பாமாலை சாத்த

கல்யாணி] [ஆதி

தனதன தத்தத் தானன தனதன தனதான

பரசிவ தத்வப் பாவனை தெளிதர அருளாலே—
பரவிய பக்தர்க் காதர வருள்பவ! குருநாதா;

நரஹரி குட்டைக் கோலவன் மருமக எனநாளும்—
நயமொடு முத்திப் பாடல்கள் மொழிதர அருள்வாயே;

பரகதி சுத்தர்க் கேயருள் திருவுளம் உடையோனே—
பணிமலை பெற்றிப் போர்நகர் தணிமலை யுறைவோனே;

அரஹர சத்தப் பேரொலி யதுநிதம் அகலாத—
அழகிய சிக்கற் கோயிலில் அழகிய பெருமாளே.

# 7. கீழ்வேளூர்

ஸ்ரீ கேடிலியப்பர் திருக்கோயில் மூலஸ்தானம் (5-10-1954)

மத்யமாவதி] பதிகம் (கொச்சகக் கலிப்பா) [திச்ர ஜம்பை

204

நாடிலி நகரமிலி நாலா விதமான
மாடிலி மனைகளிலி மற்றும் பலவாய
வீடிலி வேடையிலி ஒன்றாய் வேறான
கேடிலி வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 1

205

கோளிலி வாழ்பெருமான் கோவினில் ஏறுபவன்
ஆளிலை யென்றடியார்க் கருளிடும் திறமுடையான்
வேளினைச் சுட்டெரித்த வேந்தனென் சேந்தன்புகழ்
கேளிலி வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 2

206

ஆள்வனும் ஆவானும் ஆண்டவன் ஆவானும்
வேள்வல மாகியொரு விழைவழி பாடுசெயும்
தோள்வலி சாலுடையான் தோமர சூலமேந்தி
கேள்வனூர் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 3

207

கோளவன் ஆனவனும் கோமகன் ஆனவனும்
வாளரக் கையாட்டும் வாளருள் மாயவனும்
கோளரப் பூண்டவனும் கோவணம் இடையார்த்த
கீளவன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 4

208

மாதியென் பேருடையான் வனமுலை மாதணையும்
ஆதியெம் ஆள்பெருமான் அண்டர்கள் தொண்டர்புகழ்
நீதியில் நேயவனும் நிரைவிடை ஒன்றுடைய
கேதியன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 5

209

பஞ்சினும் மெல்லடியாள் பாவை மணந்தபிரான்
சஞ்சித மாயையெலாம் தாழ்த்திடும் தாயாவான்
கெஞ்சிடும் அடியாரைக் கேட்டருள் பூட்டருள்வான்
கிஞ்சுகன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 6

210

மாதன பாலுடையான் மால்விடை யேறுடையான்
சீதன மாஉடையான் சீருஞ் சிறப்புடையான்
போதன ஊர்தியொடும் புரிவளைக் கையன்காணுக்
கேதனன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 7

211

ஆண்மையன் ஆண்டருள்வான் ஆரியர் புடைசூழ
நாண்மைக்கண் பேருமையாள் நாண நடம்செய்தான்
வீண்மையில் வீழாமல் வேட்டருள் நாட்டியனும்
கேண்மையன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 8

212

நாடயன் மால்அறியா நம்பனும் ஆவானும்
நாடகம் ஆடிவரும் நாதனும் ஆவானும்
பாடக மெல்லடியாள் பாகத்து மேவினனும்
கேடயன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 9

213

பாலகன் பாலுக்கழப் பாலளித் தாண்டபிரான்
மாலகன் விதிகாணு மாமறை யூரானுன்
வேலவன் தாதையெனும் வேணியன் தூதுசெலும்
கீலகன் வாழுமிடம் கீழ்வே ளூர்தானே. 10

214

கேடிலி யாண்டஇடம் கீழ்வே ளூரானைப்
பாடின பத்தர்களும் பண்புறு திண்பொருளாய்
நாடின ஞானங்கள் சால நயந்தடைவார்
கேடில ராவாரே கேளுமெய் மெய்தானே. 11

ஷை கோயில் ஸ்ரீ பாலசுப்ரமண்யர் சந்நிதி

## 215. வினைதீர

கீர்வாணி] [ஆதி

தானா தானா தானா தானா தானா தானா தனதான

ஏகா போகா மோகா வேசா ஈசா தேசா சிவஞானம்-
ஈவாய் காவாய் காவாய் நாவாய் ஏறு ஏகா நகர்போனாய்;
நீகா வாகா மானுள் பாகா நீதா மேதாய் நிகராத-
நேயா ஓயா நோயால் வீயா நீசா தீசூழ் வினைதீராய்;
ஆகா கூகூ கோகோ கோகோ ஆஆ காகா எனவாரி-
ஆடா ஓடா மூடா நீடா ஆமா றேவேல் எறிவோனே;
கேகா வாகா யோகா வாகா கேள்வா நீள்வார் முலைகேள்வா-
கீதா வேதா போதா நாதா கீழ்வேளூர்வாழ் பெருமாளே.

## 216. நரகிலிடர்ப்படுவோர்

மாண்டு] [ஆதி

தனத்த தானா தான தனத்தந்
தனத்த தானா தான தனத்தந்
தனத்த தானா தான தனத்தந் தனதான

சலித்த தீயார் தேவ சுவர்க்கம்
பழித்த தீயார் பாவையர் பக்கம்
தனித்த தீயார் ஞானியர் வர்க்கம் தனையேசா-

தழைத்த தீயார் கோயில் இருக்கும்
தனத்தை ஓரா சோரம் இழைக்கும்
தடித்த தீயார் வேசிய ரைக்கண் டுறவாடல்;

பலித்த தீயார் பாவ உருக்கொண்
டுதித்த தீயார் ஆசிரி யர்க்கும்
பணத்தை யீயார் தேடி மறைக்கும் தொழுநோயார்-

பலத்த தீயார் பூசனை முற்றும்
கயத்த தீயார் மோசடி சித்தம்
படைத்த தீயார் மாநர கிற்சென் றுழல்வாரே;

சொலித்த தேசா! கோளிலி புக்கும்
தரித்த தேசா! கோயி லுகக்கும்
சுகத்தின் ஈசா! நாகை நயக்கும் குருநாதா-

தொடிக்கை மாதா வாகு முலைப்பெண்
கொடிச்சி பாலா! மாமது ரைக்கண்
துரைத்த னேசா!வாது வகுக்கும் சமணேரைக்;
கெலித்த சீலா! கேளி ரெனக்குண்
டொருத்தன் நீயே கேழல் மருப்பும்
கிடைத்த வானோர் வேணி எலுப்பும் பிறையோடே-
கிளர்க்கு மாறே சூடும் நிருத்தன்
கெனத்த சீரார் கேடிலி யப்பன்
கிழக்கு வேளூர் மேவி யிருக்கும் பெருமாளே.

## 217. மாசு நீங்க

கீர்வாணி] [ஆதி

தான தான தனதான

நாதா போதா நவநீதா-
ஞான காரா நடையேறே;
நீதா வேதா நினைபாதா-
நீசா மாசே களைவாயே;
கோதா மாதா குமரேசா-
கோலா வேலா குருநாதா;
கீதா தீதா பெரியோனே-
கீழ்வே ளூர்வாழ் பெருமாளே.

## 218. திருவடி சேர

காம்போதி] [திச்ரஜாதி அடதாளம்

தான தானன தானன தனதான

ஞான மோனதி காரமும் நினையாதே-
நாயன் மாயாவி காரமில் உழலாதே;
ஈன மானபி மானமும் அழிவாக-
ஏழை நாயேனை நீஉன தடிசேராய்;
மான வானடர் வாழ்புரி யருள்வோனே-
வாழி வாகீசர் காழியர் இசைபாடும்;
கேன ஆதீசர் கேடிலி அரன்வாழ்வே-
கீழை வேளூரில் மேவிய பெருமாளே.

ஸ்ரீ சுந்தரகுசாம்பாள் சந்நிதி

## 219. அருள்வாய்

ஆநந்தபைரவி] [சுத்தாங்கம்

(வெண்பா)

கனமலை யன்ன களபபூண் வாய்ந்த
வனமுலை மாதே! மதியே!—தினமணியே!
அட்சய லிங்கம் அகலாத கீழ்வேளூர்
அட்சரியே! நாயேற் கருள்.

# 8. எட்டிகுடி

ஸ்ரீ சுப்ரமண்யர் சந்நிதி

[6—10—54]

## 220. ஆட்கொளும் திறம்வியத்தல்

ஹம்ஸத்வநி] [ஆதி

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான

விடியல் வேளை ஊடாடி முடிய நீடி ஓடோடி
விரவு சோலை வாய்மூரில் இருவோரும்-
விழைவின் மேவ மேலான அழகு சேவை தானீயும்
விமல ஜோதி ஆகாரன் அருள்வேளே;
அடிய ரோடு பேயேனை மடைய னான நாயேனை
அடிய னேனை ஊர்தோறும் அழையாநின்-
அருளி னாலுன் ஆளான ஒருவ னாக வேஆளும்
அதனை யாதெ னாயானு மொழிவேனோ!
கடிய நீல மேகார வடிவு மேய ஓகார
கலபி யான கேதாரம் உடையோனே-
கதிரை காசி காரோண(ம்) மதுரை மாடை காருயில்
கருவை கோடை காவேரி கரையூரா;
கொடிய தான காலாய்த! நெடிய தான வேலாய்த!
கொடிய தான சூலாய்தன் அருளாலே-
குறைவு றாத சோறோடு நிறைவ றாத காகோடி
குடியில் மேவு வானாடர் பெருமாளே.

## 221. திருவருள் வியப்பு

ஹரிகாம்போதி] [ஆதி

தாந்த தந்தன தானன தானன
தாந்த தந்தன தானன தானன
தாந்த தந்தன தானன தானன தனதான

ஆண்ட வன்புகழ் பாடிய போதிலும்
ஈண்ட வண்குறை யாயின தீரவும்
ஆய்ந்த டங்கிய ஞானியர் மோனியர் அருளாலே-

ஆங்கு றும்பல தீவினை மாய்வுற
ஓங்கு றும்சிவ ஜோதியும் நீதியும்
ஆண்பெண் என்றுறு பேதஅ பேதமும் அறுமாறே;

வேண்ட வந்தவர் பேரரு ளேபெற
மாண்ட பண்பது மாயமில் நேயமு
மீண்ட டைந்திட மாயம தேபுரி முருகோனே-

வேந்த என்கவி மாலைகள் சூடிய
சேந்த! புன்கவி யாயினும் நீயதை
வேம்ப தென்றிட லாதணி வேடைநி னருளேதான்;

நீண்ட வன்பிர மாவிதி தாதைசொல்
பூண்ட வன்புக லீவதெ னுஅவண்
நேர்ந்த வெங்கரி ஓலிட ஆள்பவன் நெடுமாயன்-

நீங்க லின்றித னேடுறை வாழ்வினர்
பாண்டு வின்சுதர் நேயனு மாகிய
நீந்து தண்புனல் பால்துயில் மாதவன் மருகோனே;

காண்ட வன்படை கானவர் வானவர்
மூண்டெ ழுங்குர லோடக லாதசுர்
காண்ட லந்திட வேலயில் வீசிய திறல்வீரா-

காம்ப தென்றுறு தோளுமை பாலக!
பாம்ப ணிந்தவர் தேசிக! சோலைகொள்
காஞ்சி ரங்குடி மேவிய வானவர் பெருமாளே.-

## 222. அருகினில் வருகெனல்

தோடி] [ஆதி

தத்த தனத்தன தனதன தனதன தனதான

கட்டி யணைத்திடு மனையவள் புதல்வர்கள் சதமாகார்-
கற்றை முடிப்பரன் அருளிய குருபர ஒருநீயே;
ஒட்டி யுணர்த்திடும் உறவொடு நிலைபொருள் அதனாலே-
ஒத்துறு பத்தியில் வழிபட நினதருள் புரிவாயே;
மட்டி யெனக்குன தரிசனம் அருளிய பெரிதான-
வைப்பெனும் நித்திய மகிமையை மொழி
[புகல் வதுமாமோ?
எட்டி யிருப்பதுன் அழகல அருகினில் வரவேணும்-
எட்டி குடிப்பதி தனில்மிக அழகிய பெருமாளே.

# 9. திருவாய்மூர்

சிவபெருமான் சந்நிதி

## 223. துதி

ஹரிகாம்போதி] அறுசீரடி ஆசிரிய விருத்தம் [சுத்தாங்கம்

பாலினன் மொழியாள் பங்கா! பண்ணினர் பாடல் பெற்றாய்!
வேலினன் தாதாய்! வேதா விண்டுமுன் காணா மூர்த்தீ!
சேலினம் வாழ்செய் சூழும் சிக்கலாய்! தேவூர் மேயாய்!
மாலினன் விடையாய்! வாய்மூர் வாழும்எம் அடிக ளாரே.

ஸ்ரீ சுப்ரமண்யர் சந்நிதி

## 224. கழல்பெற

நாதநாமக்ரியா] [ஆதி

தனன தனந்த தனன தனந்த
தான தனந்த தான தனந்த தனதான

விமல கடம்ப முமலம் அடங்க
வீதி விடங்கர் ஆதி நடஞ்செய் திருவாரூர்-
விரவி யுகந்த குரவ! சுகந்த
மேவி மலர்ந்த பூவின் அலர்ந்த மணிபார்பா;

கமல முகங்கொள் குமர! சிகண்டி
காலின் நடஞ்செய் வேலை யிவர்ந்து மகிழ்வேளே—
கருணை நிறைந்த உருவபரந்த
காவி யணிந்த ஆவி யிணைந்த கழல்தாராய்;
அமல மிகுந்த கமலை அரம்பை
ஆலக டம்பை பாலினு நன்சொல் மொழியாள்சேய்—
அவனி விடங்கர் நடந பிருங்கர்
ஆல விடங்கொள் கோளிலி நம்பர் அழலாடி;
நிமல சுயம்பு கமல நடஞ்செய்
நீல விடங்கர் சால நயந்த திருவாய்மூர்—
நெடிது விரும்பி வடிவொ டிருந்து
நீடு விழைந்து நீதி தழைந்த பெருமாளே.

## 225. திருவுற

தரங்கிணி] [ஆதி

தனனு தானு தனதான

பெருமான் நீயே துணையாவாய்—
பிரியா வாழ்வே தருவாயே;
திருமான் மாதா மருமானே—
திருவே தாராய் எனலாமே;
கருமான் மாதோல் உடையாளர்—
கமழ்கீழ் வேளூர் விழைவேலா;
திருமான் மாயோன் மருகோனே—
திருவாய் மூர்வாழ் பெருமாளே.

ஸ்ரீ அம்பிகை சந்நிதி

## 226. ஆட்கொள்ள வேண்டல்

நாதநாமக்ரியை] (வெண்பா) [சுத்தாங்கம்

பாலினும் நன்மொழிப் பாவாய்! சிவையாவாய்!
வேலினெண் கண்ணியாய்! மின்னொளியாய்!—நூலின்
அனைய இடையாய்! திருவாய்மூர் அம்மே!
எனையும் உடன்ஆள் இனி.

# 10. திருவாரூர்ப் பெரிய கோயில்

(7—10—54)

ஸ்ரீ வல்லபை கணபதி சந்நிதி

## 227. அருள் மறவாமை

சிம்மேந்த்ரமத்யமம்] [ஆதி

தய்யன தனதனத் தனதான

தெள்ளிய திருவருட் டுணையாலே—
திவ்விய தரிசநத் துறுபேறே;
நள்ளிய அடியனுக் கருள்ஞாநம்—
நல்லது நினைவினிற் றவறேனே;
வெள்ளிய கிரியனுக் கிடம்ஆரூர்-
வெள்ளிடை எனவிருப் புறுவோனே;
வள்ளியை முருகனுக் கருள்வோனே—
வல்லபை கணபதிப் பெருமானே.

ஸ்ரீ வன்மீகநாதர் சந்நிதி

## 228. போற்றி

மோஹநம்] அறுசீரடி ஆசிரிய விருத்தம் [சுத்தாங்கம்

களங்கமில் அமுதே போற்றி!
களங்கமழ் நஞ்சாய் போற்றி!
புளங்கித மூலட் டானம்
புற்றிடங் கொண்டாய் போற்றி!
விளங்குறும் திருவே போற்றி!
விண்ணவர்க் கரசே போற்றி!
வளம்பொழில் ஆரூர்க் கோயில்
வன்மீக நாதா போற்றி!

ஸ்ரீ தியாகராஜஸ்வாமி சந்நிதி

## 229. யான் நின் தொண்டன்

சிம்மேந்த்ரமத்யமம்] (அறுசீர் விருத்தம்) [சுத்தாங்கம்

நாயன்மார் பாடல் பெற்ற
நாயகன் நின்னை நாயேன்

ஏயசொல் எதனுற் சொல்லி
ஏத்துகேன் அறிகி லேனே
மேயபூங் கோயில் வீதி
விடங்கத்யா கேசா நீயே
ஆயவை அறிவாய் ஆரூர்
ஆதியே யான்நின் ஆளே.

### ஸ்ரீ முருகர் சந்நிதி

## 230. அருட்பார்வை பெற்று மகிழ

ஹரிகாம்போதி] [கண்ட த்ரிபுடை

தனனதன தனனதனத் தானனத் தனந்த
தனனதன தனனதனத் தானனத் தனந்த
தனனதன தனனதனத் தானனத் தனந்த தனதான

மதிவதன ரதிபதியைத் தீயெழக் கடிந்து
புரமெரிசெய் திருவதிகைக் கோயிலுட் புகுந்து
வரிசைமொழி யரசுதரச் சூலையைக் களைந்து
விளையாடல்-

வடிவிநெடு நடைமுறையிற் கேடறப் பயின்ற
பொடியுடைய படிவன்அருட் பாவலர்க் கிணங்கி
வரவுமுறை பரவைமனைத் தூதுபுக் குவந்த
பெருமானுர்;

விதிமுடியை யதிவிநயத் தோடுமுற் குடைந்து
திருகுமொரு முருகுபெறக் காலனைச் சினந்து
மிடறுடைய விடமருவித் தேவரைப் புரந்த உபகாரி-

விழைவுசெவி நுழையவுரைத் தேரகத் திருந்து
முடியவழி படுமடியர்க் காவதைப் புரிந்து
விரவுமுன கருணையருட் பார்வையிற் கலந்து
மகிழ்வேனே?

அதிமதுர கவியருளிற் பாடலுற் றுணர்ந்த
அருணகிரி யடிபரவக் காதல்மிக் கணைந்த
அமல!பவ முமலமதைத் தீதறுத்த கந்த அடல்நாகை-

அருகிலுற மருவுவெளிப் பாளையத் தமர்ந்த
அழகுடைய குழகன்அகத் தீசுரர்க் குகந்த
அமர!குரு குமர!திருப் பாசுரப் ப்ரபந்தம்
அருள்வேளே

கதியுதவு மதியதிருப் பாவையைப் புணர்ந்த
கருடபதி மருக!கடிக் காமலர்க் கடம்ப!
ககனபதி விரதஅநுட் டானமுற் றிருந்த திருவாரூர்க்-
கமலைநகர் அமலைசிவ த்யாகருக் கிசைந்த
கமலைதரு குமர!தவக் கோலமெய்க் கணிந்த
கழகமுநி தொழுதகுறப் பாவையைப் புணர்ந்த
பெருமாளே.

## 231. அன்பு பெருக

உஸ்ஸயினி] [ஆதி

தத்த தனந்தத் தனத்த தந்தன
தத்த தனந்தத் தனத்த தந்தன
தத்த தனந்தத் தனத்த தந்தன தனதான

மெத்த நினைந்துற் றுணைப்பு கழ்ந்திட
அற்ப மனம்பெற் றவப்பு லம்பிட
விட்ட சினம்பெற் றிடப்பொ ருந்திய விதியாலே-
மிக்க வணங்கப் புகட்டு மன்பினை
ஒக்க அணைந்துற் றடக்க முஞ்செய
மிச்சமு மின்றிச் செருக்க ழிந்திட விதியாதே;
ஓத்த அகந்தைக் குணத்தை வென்றிட
வெற்றி பிறங்கச் சிவத்தை யொன்றிட
ஒட்டி யுடம்புக் குணர்ச்சி பொங்கிட ஒருகோடி-
ஒப்பில தென்றுற் றிசைப்ர பந்தமு(ம்)
முற்ற மொழிந்திட் டிரக்க முங்கொள
உற்ற உனன்பைப் பெருக்க(ம்) மிஞ்சிட அருள்வாயே;
நித்த மிடும்பொற் கழற் சுயம்புவை
அத்தநன் மன்றிற் றரித்த சம்புவை
நெட்டை தழங்கத் தழைத்த அங்கியை உரியோனை-
நித்தலும் இன்பிற் கவிச்சொல் தொண்டர்கள்
சித்தம தொன்றிச் சிறப்பு றுஞ்சிவன்
நிர்க்குண சங்கப் பரத்வ சங்கரன் எரியாடி;
சத்த விடங்கத் தலத்து ளொன்றென
மற்ற விடங்கட் சிறப்பு றுஞ்சிவ
தத்வம் அடங்கப் படைத்த மைந்துள தனியாரூர்ச்-
சத்தி துலங்கத் தழைத்து வந்தொரு
சத்தி விளங்கக் கரத்து கந்திரு
சத்தி யிலங்கத் தரித்தி ருந்தருள் பெருமாளே.

## 232. ஞான ஊதியம் பெற

பூரிகல்யாணி] [ஆதி

தனன தானத் தனதான

கருவா யூறிப் பிறவாதே-
கடைநா யேனுக் கொருஞான;
வருவாய் ஆரத் தருவாயே-
வருவாய் தோகைப் புறமீதே;
இருவாய் தீயப் பவமாயின்-
இறவா தேமுத் தியையீயும்;
திருவா ரூரிற் பயில்சேயே-
ஜெகஆ தாரப் பெருமாளே.

## 233. குற்றம் அற

கல்யாணி] [ஜம்பை

தானத் தனதான

நானப் புவிமீதே-
நாடாத் திரிவேனைக்;
கோனக் குருவாகிக்-
கோதாட் டறஆள்வாய்;
மானர்க் கினியோனே-
வாடாத் தொடைமார்பா;
ஆனப் புகழோனே-
ஆரூர்ப் பெருமாளே.

### ஸ்ரீ நீலோற்பலாம்பிகை சந்நிதி

## 234. அருள்செய்வாய்

வஸந்தா] (வெண்பா) [சுத்தாங்கம்

நீலோற்ப லாட்சி! நிமலே! கமலையே!
மாலோற் கிளைய மரகதமே!—வேலோச்சும்
போரூர்க் குமரன்தாய்! புற்றிடங் கொண்டார்வாழ்
ஆரூர்க் கமலாய்! அருள்.

## 235. கீர்த்தனை

வஸந்தா] [ஆதி

பல்லவி

நீலோற்ப லாட்சியைக் கண்டா ரூரினில்
நினைந்து பிறந்தவர் இறவாரே (நீலோற்)

அநுபல்லவி

மேலோர்க் கேயருளும் விமலை கமலினி
மாலோற் கேஇளைய மாது கமலாலய (நீலோற்)

சரணம்

கோலோச் சும்அரசன் குடிமுறை தவுறுன்
ஆலோலம் பாடிய அன்னையின் கணவனும்
வேலோச் சும்வேந்தன் விசாகனை யீன்றுசெங்
கோலோச் சும்குமரி வன்மீக நாதர்கோதை (நீலோற்)

ஸ்ரீ கமலாம்பிகை சந்நிதி

## 236. தேவியின் கருணை

அடாணா] (வெண்பா) [சுத்தாங்கம்

கமலா லயபுரியாம் ஆரூர் கலந்த
கமலாம் பிகைதன் கருணை—மமலம்
களைந்தென்னைக் காத்தருளக் கண்பார்த் தருளி
இளைத்தேனை ஆள்வாள் இனிது.

# 11. சுவாமிமலை

ஸ்ரீ வல்லப கணபதி சந்நிதி

## 237. நல்வாழ்வு பெற

ஹரிகாம்போதி] [ஆதி

தய்யன தனனத் தனதான

எல்லப விநோதத் திறையோனே—
எள்ளுறு விகாரத் துறுமாயைப்;
பொல்லப கடாதிக் கழிவேனைப்—
புல்கிய நல்வாழ்வைத் தருவாயோ?
சல்லப குமாரப் ப்ரபுவாழும்—
சல்லிய சுவாமிக் கிரிவாழ்வே;
வல்லபை சமேதப் பெருமானே—
வல்லப கணேசப் பெருமாளே.

## அடிவாரம் ஸ்ரீ சுந்தரேசுவரர் சந்நிதி

### பதிகம்

காம்போதி] [ரூபகம்

238

எந்த நாளுமே
சொந்த மாயினீர்
சந்த ஏரகச்
சுந்த ரேசரே. 1

239

கந்த மார்பொழிற்
செந்தில் மேயவன்
தந்தை யாயினீர்
சுந்த ரேசரே. 2

240

இந்த நாமமே
எந்தக் கோலமாய்
வந்து மேவினீர்?
சுந்த ரேசரே. 3

241

பந்தன் பாடல்கள்
சந்த மாய்ப்புனை
தந்த தாளினீர்
சுந்த ரேசரே. 4

242

தொந்தம் நீக்கிடீர்
பந்தம் பாற்றிடீர்
கந்தன் தாதையீர்
சுந்த ரேசரே. 5

243

வெந்த நீறுடல்
உந்த வேணியிற்
சிந்து சூடினீர்
சுந்த ரேசரே. 6

244

எந்தம் தீவினை
நந்த நன்றுளீர்
குந்தன் ஏரகச்
சுந்த ரேசரே. 7

245

உந்தம் ஓரருள்
இந்தப் பூமியில்
முந்த மூட்டினீர்
சுந்த ரேசரே. 8

246

இந்து சேகரீர்
சந்து லாம்பொழில்
மந்த ஏரகச்
சுந்த ரேசரே. 9

247

திந்தி தீமென
அந்தம் ஆடுவீர்
புந்தி போந்துளீர்
சுந்த ரேசரே. 10

248

நிந்தை பேசினும்
விந்தை யேசெய்வீர்
எந்தை ஏரகச்
சுந்த ரேசரே. 11

249

மந்தி சோலையிற்
பந்தி யாய்வரும்
தந்தி ஏரகச்
சுந்த ரேசரே. 12

250

அந்த மீன்விழி
விந்து நாதநீர்
எந்தை ஏரகச்
சுந்த ரேசரே. 13

## ஸ்ரீ மீனாட்சியம்மை சந்நிதி

## 251. போற்றி

மோஹநம்] (அறுசீர் விருத்தம்) [சுத்தாங்கம்

கந்தன்வாழ் ஏர கத்தைக் கண்டுவாழ் இடமாக் கொண்ட
சுந்தரே சற்குத் தேவீ! சுகிர்தமீ னாக்ஷி யம்பா!
வந்தபேர்க் கருள்செய் தாளும் வரதையே! மகிமை மிக்க
குந்தனும் எந்தை தாயே! கொடியிடை யாளே! போற்றி.

## ஸ்ரீ முருகர் சந்நிதி

## 252. திருவருள் பெற

மாண்டு] [ஆதி

தனன தாத்தன தனதன தனதன
தனன தாத்தன தனதன தனதன
தனன தாத்தன தனதன தனதன தனதான

அடாத வார்த்தைகள் மொழிபவன் ஒழிவிலி
படாத பாட்டடி படுபவன் நடுவிலி
அனாதி சாத்திரம் அறிகிலி வெறிகொளி அவமானி-

அமோக தீட்சைகள் பெறுகிலி உனதடி
வழாது வாழ்த்திலி உருகிலி பெருகிலி
அதீத சூட்சும தரிசனை யுணர்கிலி அபராதி;

எடாத மாப்பொருள் அதனினும் ஒருதுளி
கொடாத கூட்டமும் எதுவித தருமமும்
இடாத கோட்டியும் நிலைபெறு துணையென நினைவேனை-

இராத ஈர்க்கிடை மடமகள் உமையவள்
குமார பார்த்திப அறுமுக சரவண
எனாத மோட்டனை ஒருவிசை திருவருள் புரிவாயே;

கெடாத பேற்றினை வழிபடு மவர்பெற
விடாது காட்டிய அயிலவ! மயிலவ!
கிராதை காட்டினில் வதிதரு வனசரர் கொடிகேள்வா_

கிரீடி பார்த்தனின் இரதமு னடவிய
முராரி மூர்த்தியின் மருமக! பெரியவ!
கிலேச ராட்சஸ குலஹரி! பிரணவ உபதேசா;

விடாத வேட்கையொ டடியவர் பரவிட
விநோத காட்சிகள் அருளொடு தருபவ!
விசாக தீட்சித! விடைநடை யுடையவ! வியலூரா—

விதேக மோட்சமும் அருள்பவ! குருபர!
சுவாமி கோத்திரை யெனவொரு பெயருடை
வியாழ கோத்திர மருவிய சசிமகள் பெருமாளே.

## 253. பிரணவப் பொருள் பெற

நாதநாமக்ரியா] [ஆதி

தனனு தனத்த தந்த தனனு தனத்த தந்த
தனனு தனத்த தந்த தனதான

கருணு கரக்க டம்ப அருணு சலத்த மர்ந்த
கதிர்வேல் பிடித்த கந்த! முருகோனே—

கமலா சனத்தன் அந்த மதிவேணி யத்தன் உந்தி
கமலா லயத்தன் விண்டு தெரியாத;

அருணு கரத்து யர்ந்த அழகான சித்த! குந்த!
அடலீன நட்டம் ஒன்று கழல்வீரா-

அரனுர் செவிக்கு கந்த பொருளே யுரைத்த மைந்த!
அதுவே எனக்கு மின்று புகல்வாயே;

வருணுதி மற்ற வும்பர் அடிபாட மற்று வந்து
வழியே புகட்டி நின்ற விறலாளா—

மடவாள் குறத்தி பங்க மயிலாள் சுரப்பெ ணன்ப!
வனவேடு வர்க்கி சைந்த மருகோனே;

தெருணுத சொற்ப்ர சங்க! ஒருபாசு ரப்ர பந்த!
சிவநாதர் சித்தம் வந்த சிறியோனே—

திகழ்கா விரிக்கி யைந்த வடபால் அமைப்பு யர்ந்த
திருவே ரகத்தில் நின்ற பெருமாளே.

## 254. கழல் சேர

ஸஹாநு] [ரூபகம்

தனன தனத் தனதான

எழாத அருட் பிரசாதம்-
இகாத படிக் கருள்வோனே;
வழாத சிவப் பொருளோனே-
மயூர மதிற் றிரிவோனே;
பழாத பழத் தினைநேராய்-
பராவி அழத் தெரியாத;
தொழாத எனைக் கழல்சேராய்-
சுவாமி மலைப் பெருமாளே.

## 255. சரணகதி யடைதல்

சாரங்கா] [ஆதி

தனதன தனதன தனதான

செகபதி யெனவரு சிறியோனே-
சிவனது செவிமிசை உபதேசம்;
புகவொரு புகலருள் பெருமானே-
புகலிடம் உனையல துளதோதான்;
அகமகிழ் அறுமுக! அறிவாளா-
அயிலவ! மயிலவ! அழகாளா;
குகசர வணபவ! குருநாதா-
குருகிரி மருவிய பெருமாளே.

292, லிங்க செட்டித் தெரு, சென்னை-1. 8—10—54.

திருத்தணிகேசர் சந்நிதி

## 256. 'திருவருள் மறவேன்' எனல்

பைரவி] [ஆதி

தாத்தன தனதன தனதன தனதன தனதான

மார்க்கமில் உறுதுணை புரிதர வருபவ மயில்வீரா!-
வாழ்த்திய கவிமலர் இசையொடு புனைபவ! வடிவேலா!
தீர்க்கஷண் முக!குக! சரவண பவ!யுவ! சிவதேச-
க்ஷேத்திர தரிசனை தருமுன திருவருள் மறவேனே;
பார்க்கவ புரபதி நரகரி முரகரி மலர்மேவு-
பார்க்கவி அதிபதி புரிவனை அரிதிரு மருகோனே;
பார்க்கவன் ஒருகுரு வெனமதி நிசிசரர் குலகாலா-
பார்ப்பதி பெறுசுத! தணிமலை யழகிய பெருமாளே.

அருட்புகழ் முற்றும்.

# அருட்புகழ்

## (1-10-54 முதல் 8-10-54 வரை)

### *குறிப்புரை

1. தூங்காச்சுடர் - அணையாத (மங்காத) சுடர். ஈன்ருய்க்கு- என்னை ஈன்றவளுகிய உனக்கு. ஏற்றிடும் - ஏற்றுக் கொண்டிடும். தாண்டா - தாண்டி. குதியா - குதித்து. மூன்ருய்ப்புவி - மண், விண், பாதாளம். மூன்ருய்ப் பரம்பொருள் - அயன், அரி, அரன்.

2. தீத்திறல் - அக்கினியின் வன்மை. சேர்த்திய - சேர்த்த. பாத்தியம் - உறவு. சாட்சிய - சாட்சியையுடைய. சாட்சிய காட்சியர் - அனைத்தையும் சாட்சி மாத்திரமாயிருந்து பார்ப்போர்.

3. போக வல்லி - வள்ளி நாயகி; அல்லது இந்த்ர லோக போகத்துக்குரிய தெய்வயானையாம் கொடி போல்வாள். நாகம் - புன்னைமரம். நாகை நல் அகம் என்றது ஸ்ரீ பி.எம். சொக்கநாதசெட்டியார் அவர்கள் இல்லத்தை.

4. சித்து - ஞானம். நத்து - சங்கு. ஆழ் வார் கடல்-ஆழ்ந்த, நீண்ட கடல். கவுந்தன் - குருந்தமேறி. சேனம் - கருடன்.

5. கவுந்தம் - குந்தம்; குருந்தமரம். முகுரம் - கண்ணுடி. படிமக்கலம் - கண்ணுடி. முகுரம் - ஒரு மல்லிகை. முகுளம் - தாமரை; மலரிதழ். கலியமுநி - திருமங்கை யாழ்வார்.

6. விட்டை - (பசுஞ்) சாணம்; இங்கு விபூதியைக்குறித்தது.

7. திட்டை - சம்பந்தர் தேவாரம் பெற்ற தென்குடித் திட்டை. வெட்டையாறு - வெட்டாறு. (ஐ - அசை.) வெட்டாற்றினூர்—விற்குடியார்.

10. குட்டை - போர்த்துக் கொள்ளுந் துணி.

11. துட்டையானவர் - துஷ்டர்கள். மொட்டை மோலியர்- சமணர். கட்டு - வலிமை.

---

*நூலாசிரியரின் தம்முனர்-உயர்திரு. S. V. சுப்ரமண்யம் அவர்கள் எழுதியது.

12. கட்டை - விறகுக்கட்டை. மட்டை - மட்டு+ஐ=தேனை யுடைய தும்பைப்பூ அணிந்த. மட்டை-ஒரு பாம்பு-எனி னுமாம். எட்டைத்தோளினர்-எட்டு அழகிய தோளினர்.

13. மட்டையாளர் - அறிவிலார். ஒட்டை - உறவை. ஓய்த் துவர் - ஓயச்செய்கின்றவர். எட்டை - எட்டு ஐ - எட்டிய (வந்தடைந்த) துர்க்கைக்கு. எட்டு - அட்ட மூர்த்தம். ஐ-சிறந்த எனினுமாம்.

14. சிட்டை - நியமமுள்ளாள். மொட்டை ஆர் - பூ மொட் டினைப் போன்ற. கட்டைக்கு - கட்டுகைக்கு.

15. அட்டை - அட்டைப்பூச்சி. அட்டு ஐயாற்றினில் - எனப் பிரிக்க. பட்டைப்பூட்டினர் - சைவ வேதியராய்ப் பட் டணிந்தவர். "ஐயாறதனிற் சைவனுகியும்"—திருவாச. கீர்த்தித் - 85.

16. முட்டைநேர் - முட்டுப்போன்ற. கெட்டு+ஐயாக்கெட. ஐயா - வியப்பாக. ஐ - வியப்பு. சுட்ட ஐ - சுட்டை - எரித்த தலைவர்.

17. காளாத்ரி - திருச்செங்கோடு. காவை - திரு ஆனைக்கா. தண்டலை - தண்டலை நீணெறி. கானட்டு முட்பதி - கானட்டு முள்ளூர். வீழிப் பொன்தலம் - திருவீழிமிழலை. வேதக்கண்டி - பிரமன் தலையைக் கண்டித்த கண்டியூர். கால் ஆள் படை - காலையே ஆளும் ஆயுதமாகக் கொண்ட சேவல். சுண்டு-ஒரு முகத்தலளவை. கஞ்சுளி நாதேச்சரம் - சட்டைநாதர் கோயில். கஞ்சுளி -சட்டை.

18. சிங்கை - காங்கேயம். கங்கைபோற் றனிக்கடல் - கங்காப்ரவாகம் போன்ற கடல். கடல்போற் கங்கை என் னும் வழக்கு மாறிவந்தது. கஞ்சுளீச்சரம் - சட்டை நாதர் கோயில்.

19. முத்திமாது பத்த - தேவசேனையின் பர்த்தாவே. சத்த சத்தவாரி - ஆரவாரஞ் செய்யும் ஏழு கடல்கள். மாற - (உக்ர) பாண்டியனே. சர்க்க பட்சம் - (பிராகாரத்தின்) ஒரு பக்கம்.

22. மாதி - சிவபிரான். குடக்கோணம் - கும்பகோணம். ஞாதி - சுற்றம்; தந்தை. வாணன் - தீயைக் (கையிற்) கொண்டவன். வாணன் - வாழ்நன்.

24. ராகினி, காகினி, லாகினி, சாகினி, டாகினி என்பன ஆதார சக்திகள். காகி - விளா (இலை).

27. மதாசல வத்திரன்-யானை முகத்தன். குருகு - புருக்கள். குமர கோயில் - மெய்கண்ட வேலாயுதர் கோயில்.

28. சூதன் - சூதனன்; அழிப்பவன். வேழம் - யானை. அட்ட - எட்டு. ஆகனுர் - பெருச்சாளி வாகனத்தவர். தட்சன் - கோழி. கோடல் - காந்தள். கொக்கு-மாமரம். கோபிகா கீதபதி - கிருஷ்ணன். சிவராஜதானி - நாகை.

29. குருகு - அன்னப்பறவை. கேழல் - பன்றி.

30. குடி - கோயில்.

31. கவி - திறப்புகழ் பாடிய அழகு முத்துப்புலவர். எல்லிழை - வள்ளி அல்லது தெய்வயானை. பல் இழைத்த- இழைத்த பல.

32. நாசச் செயலர் - ஸம்ஹார கர்த்தா; சிவன். 39. தேள் - சிவன் சடையில் உண்டு. பஞ்சக்ருத்ய அபிநயம் அதே- பஞ்சக்ருத்ய தாண்டவத்தையே.

40. பணகிரீச்சரம் - திருச்செங்கோடு. 41. காண்டவன்-இந்திரன் கூறுன அருச்சுநன்.

43. கொடுதி - கொடுத்தி.

44. ஏனம் - பன்றி. கராளன் - தீக்குணத்தன்.

45. ஆர்கலி - கடல். 46. ஓகை - மகிழ்ச்சி. பாடி - திருவலிதாயம்.

47. பிட்சு புராணம் - பௌத்த நூல்கள். சிக்ஷணம் - கண்டனம். முட்சு - முமுட்சு என்பதன் முதற்குறை. சக்ஷு, விலோசனம் - (ஒருபொரு ளிருசொல்) - கண். சரஜாதம் - தாமரை.

49. ஞாதி - சுற்றம். மேதி - எருமை.

50. கந்தருவர் கம்மல் - அச்வதரர், கம்பளர் என்னும் இரு கந்தர்வரும் சிவபிரான் காதில் தோடாக உள்ளனர்.

52. நாதி - நாதன் என்பதன் பெண்பால் - மனைவி. மலைமுலையாள் - இது 'அசல குசாம்பிகை அம்மை' என்னும் அக்கோயில் தேவியின் திருநாமத்தைக் குறித்தது.

53. நேதி - நியதி. 54. ஏதி - வாள். 57. மாது - கங்கை. தாதி - கமலினி, அநிந்திதை முதலியோர்.

58. சேதித்து - ஒரு தலையை வெட்டி.

59. முசலம் – உலக்கை. பசலை – பசலைக் கொடி.

60. சமிதம் – நெருப்பு. கடம் – (நாணற்)காடு. ரமித – ரமிக்கத்தக்க. ப்ரமித – ப்ரமிக்கத்தக்க. அமிதம் – அளவின்மை.

62. அமை – மூங்கிற்குழல். கூபாரம் - கடல். கோ பால லோசனர் – சிறந்த நெற்றிக்கண்ணர். ஆகீசர் – விநாயகர். நேயர் - புண்டரீகர்.

64. காலகரி – யமனை அழித்தவள். நேரோடம் – நாவல்; அல்லது நேராகக் கடலில் ஓடங்கள் சூழ்கின்ற.

66. மடநாகு – இளம்பசு.

67. குடமாடி - குடக்கூத்தனும் திருமால். கோடாச்சரம் – கைக்கொள்ளாத அம்பு. வாங்காச்சிலை – வளையாத வில். யாருக்கும், வசப்படாத திருமாலாம் அம்பும் மேருமலையாம் வில்லும் சிவபிரான் சிரித்தே திரிபுரத்தை எரித்து விட்டதால் நிலைகுலைந்து தடமாடின. பிறகு அவற்றின் வேண்டுகோளின்படிச் சிவபிரான் அந்த வில்லையும், அம்பையும் உபயோகித்தார் என்பது வரலாறு. தைத்தார் - பொருந்த வைத்து உபயோகித்தார்.

69. படநாகப் பாயார் - திருமால்; தடநாகம் தானேறுவார் – அகன்ற ஆகாயத்தின்கண் (அன்னமாய்ப் பறந்து) ஏறிய பிரமன். கடவா – கடந்து. முற்காணூர் – முன்பு காணப் படாதவர்; சிவபிரான்.

70. கடபோகம் - சரீர சுகம்.

71. வடகானம்–திரு ஆலங்காடு என்னும் தலம்.

74. குடற்சூலை – அப்பருக்கு ஏற்பட்ட நோய்.

75. வேங்கைக் கட மா - கோபித்த வேங்கைப் புலி. அல்லது கடமா - யானை எனினுமாம். வேங்கைத்தோல், யானைத்தோல் இரண்டும். கடமாடும் – காட்டில் ஆடும்.

79. விடல் – விடுதல். படல் – மறைக்கும் வேலி.

80. வடல் – வடக்குப் புறம். நட - நடுவதற்கு.

82. முடக்குவாதம் என்னும் நோயோடு முயலகன் என்னும் நோயையும் வடதிசைப்புறம் ஏக வைத்தார் – சிவபிரான். சம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமத்தில் முயலகன் எனும் நோயைத் தீர்த்ததை இது குறிக்கலாம். குடக்கோடி – ஊர்ப்புறத்தின் கோடி. குடம் – பட்டினம்.

83. சடச் சடக்கு - உடற் செருக்கு; ஜடவாயுவின் வேகம்.

84. விடக்கு - ஊன்.

85. (கடுஅல் நாக ஐக்கு) நாக கடு அல் ஐக்கு-வாசுகியின் விடத்தால் கறுத்த கண்டங் கொண்ட சிவபிரானுக்குச் (சடையிற்) (கடல் - கட்டு + அல்) கட்டல் (ஆர்) ஆத்தியும் (ஓணம்) கங்கையாறுமாம்; மேலும் அவர் கட்டியணைந்த (நாகு) பெண்பசு போன்ற (ஐ) துர்க்கைக்கு (ஆர்) பொருந்தியநட்சத்திரம் (ஓணமே) திருவோணமாம் (விஷ்ணு சக்தியாதலின்). கடனு- கடமையாக, கைக்கு (ஆரோணம்) உயரப் பிடித்த கொடி இடபமாம்; மே- அன்புடைய இடம், கடல் நாகைக் காரோணம் ஆகும்.

86. உடற்பூச்சும் சாந்தும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் கேட்கச் சிவபிரான் அவற்றை அவர்க்கு அருளினார்.

89. நாக மோலி - மேகம் பொருந்திய சடாமுடி. நாக மாமலர் - சுரபுன்னை மலர். நாகம் - நாகப் பாம்பு.

91. சோக சூதனீர் - துக்கத்தை அழிப்பவரே.

92. பாக தீகன் - பகுதியாக உள்ள (பிறைச்) சந்திரன்.

93. பாக சாதனன் - இந்திரன். மூக வேஷணன் - பன்றி உருவெடுத்த திருமால். இந்திரனிடத்தும் திருமாலிடத்தும் அரனே இருந்து இயக்குகிறார் என்றபடி.

94. சூகராசுரன் - பன்றி வடிவ அசுரன். காகம் - ககம் = அம்பு. ககம் எதுகை நோக்கிக் காகம் என நீண்டது.

96. ஈகம் - சந்தனமரம். நாவலம் - நாவல் மரம். பூகம் - பாக்கு அல்லது பலா மரம். வாக - அழகுடைய.

97. கூகம்-ஆந்தை. சாகம் - தாழை அல்லது தேக்கு.

98. நாக பாலை - மலைமகள்; பார்வதி.

99. மூசு அளி - நெருங்கி மொய்க்கும் வண்டுகள். நகில் - தனபாரம். நசை-அன்பு. அளி-கருணை. குலை அண்ட கோமள - மலை நாட்டழகியாம். குலைம் - பர்வதம். வாளரவு பூசித்த தாளரவத் தண்டை - இதுநாகநாதர் கோயிலில், சிவபிரானை நாகம் வழிபட்ட ஐதிகத்தைக் குறிக்கும்.

100. தோகை - மயில். நார ஜாதம்-நீரிற் பிறக்கும் தாமரை. வாசகேசர்-திருநாவுக்கரசர். வேதனூர் - சீர்காழி. கான பான - சங்கீதத்தையே பருகுபவன், கான லோல — காட்டிற்றிரிபவன். சேன யானன்—கருடவாகனன்.

101. மூகம் - ஊமை. நாகம் - பாம்பு போன்ற. துவல் - அருச் சிக்கும் (உதிரியான) பூ. நாகம் - சுரபுன்னை மரம்.

102. சத்தி - வாந்தி, கக்குதல். முட்டம் - முடம் - சந்தம் நோக்கி வலிந்தது. அள்செவிடு - காது செவிடு. நக்கல் உற்ற குழை - திருவாலங்காட்டில் ஆடியபோது, கால் விரலினால் எடுத்துக் காதில் மாட்டிய குழை. குழை அக்கன்-சங்கினை. (குண்டலமாக) அணிந்தோன். அக்கு அணியும் அக்கன்-எலும்பை யணிந்த ருத்ரா க்ஷ மாலை யன். இக்கன் – கரும்பு வில்லினனும் மன்மதன். மக்க- மடிய. நக்கன் – நிர்வாணி. மாதி ராஜதானி - சிவராஜ தானி. மாதி - சிவன்.

103. சீத - குளிர்ந்த. 104. வங்கம் - அலை; கப்பல். பிலகாரி- பெருச்சாளி.

106. வாரண படாகை - சேவற்கொடி.

107. பாராவார தரங்க நடம் - இது நாகைத் தியாகராஜப் பெருமானின் நடனத்தின் பெயர். சுந்தரர் ... விடங்கர் - சுந்தர விடங்கர். இவரது நடனம் வீசி நடனம், பாரா வாரம்-கடல். தரங்கம்-அலை. பாராசாரி-குதிரை. பாராசாரி விடங்கர் குதிரை நடைபோல வீசி நடஞ்செய் விடங்கப் பிரான். வேலா - வேலா ஏற்றம் தாரா தாரகை-நட்சத் திரம். மேனகை - இமவான் மனைவி.

108. செடியன் - இழிந்தவன். வண்டன் - துட்டன். விடங்கம்- அழகு. மஞ்சரி-பூங்கொத்து; தெய்வப் பெண். அஞ்ச வாது-அம் ஜவாது எனப் பிரிக்க. நாகைச் சுந்தர விடங் கத் த்யாகரின் நடனம் அசபா நடனம் எனப்படும்.

109. மூமல அசத்தே எனப் பிரிக்க. கமலால்யத்யாகேசர் - திரு ஆரூர்த் த்யாகேசர்.

110. விழி பால - பாலவிழி - நெற்றிக் கண்ணுடைய. கழி - கடலை யடுத்த உப்புநீர்ப் பரப்பு. நாகைக் கடலில் ஓர் உப்பங் கழியொன்று கலப்பது இங்குக் குறிக்கப்பட்டது போலும்.

111. ஸரஸ்வதி பூஜையன்று இரவு (1-மணிக்கு) வெள்ளை நிறச் சாத்துபடி தேவிக்குச் செய்யப்பட்டிருந்ததால் 'வெள்ளை நகை', 'வெள்ளை மலர்', 'வெள்ளைநிற உடை' எனக் கூறப்பட்டது. காஞ்சிபுரத்தில் தேவி சிவபிரானைப் பூசிக்கும் காட்சியில் அலங்காரம் இருந்தது. இப்பாடல் பாடப்பட்டபோது உடனிருந்து கேட்டோர் அனைவரும் தேவியிடம் ஈடுபட்டு உருகிவிட்டனர். "கல்லகம் கரைத்தாளடி" என்ற கடைசி அடியைக் கவனிக்கவும். கல்லகம் - கல்நெஞ்சு.

112. நளாறிடை - ஆற்றின் நடுவில். வம்பு-நறுமணம். தும்பி-யானை.

113. நாகீச - குரல்கீச. கீச்சுக்குரலோடு. (இப்பாடல் பாடிய போது தொண்டை மிகக் கம்மிக் கீச்சுக் குரலா யிருந்தது.) நாகு ஈச - இளமை வாய்ந்த ஈசனே எனலுமாம். யோனீஜன் - தாய் வயிற்றிற் பிறந்தோன். ஆகீசன் - கணபதி. ஆகீசபுர ஆதி ஈச்சரம் - கணபதீச் சரம். ஆறுத - கெடாத. வாகீசர் - அப்பர்.

114. அன்புடையார்தம் கோட்டம்-பக்தர்களுடைய (உள் ளக் கோயில்.

115. காட்டு - காட்டப்படுகின்ற. அம் கனல் எனப் பிரிக்க.

116. நாள் - நல்ல (நாளில்) தருணத்தில். தம்-தம்முடைய. கடை - கடைக்கண். நாட்டங்கடை - கடைக்கண். நாட்டம் - விருப்பம். தாருகாவன ரிஷிபத்நிகளுக்கு இச்சை உண்டுபண்ணினவர். நாட்டம் - திருவருள் நாட்டம். வேட்டங்குடி-திருவேட்டக்குடி.

117. ஈட்டம் - செல்வம். தேட்டம் - பராமரிக்கப்பட்ட.

118. மாட்டு - (மாடாம்) இடப வாகனத்தின் மீது.

120. மாட்டு அண் புறம் - இடபத்தின் மேற்புறத்தில். பாட் டன் விதி - மூத்தோனுன பிரமன். காட்டு அங் கடை எனப் பிரிக்க. அம்கடை (கண்) காட்டு - அழகிய கடைக்கண் காட்டுபவர்.

121. மூட்டம் - மூடியிருக்கும் நிலை. சேட்டம் - மேன்மை. தோட்டங் கழகார் - தோள் தங்கு அழகார்.

122. தோடு அம் குழையாளர் எனப் பிரிக்க. தோட்டு அன்றலர் மாலை - பூ இதழ்களாலான அன்று மலர்ந்த (பூ) மாலை. தாள்தன் சடையார் - பூமாலைகளைத் தன்

தாள்களிலும் சடைமீதும் கொண்டவர். தாட்டன் - தலைவன், பெருமைக்காரன் எனினுமாம்.

123. வாட்டண் விழி - வாள் + தண். விழி-வாள் விழி, தண்விழி எனக் கொள்க.

124. ஊட்டு அம் - ஊட்டும் அழகிய. கோட்டம் - கோயில்.

125. ஓட்டம் - வாயிதழ். துவர் - பவளம். வெண்காட்டள் - திருவெண்காட்டு நங்கை. உடையார்-சிறுத்தொண்டர்.

126. ஆட்டம்...பிடிப்பார் — பிள்ளைக்கறியை வேட்டு உண்ணும் சமயத்தில் சீராளனை அழைக்குமாறு கூறி, அங்ஙனம் அழைக்கச் சீராளன் வந்ததும் உள்ளே நுழைந்தபோது காணப்படாமல் ஓட்டம் பிடித்து மறைந்த சிவபிரான்.

127. காராளன் - மேகத்தைக் கொண்டவன்.

128. தேட்டங் கொடுக்கு-தேள் (கள்) தம் கொடுக்கு- கொடுக்கின் நீளத்திற்கும், விடத்திற்கும், வடிவுக்கும் சமமாக விழியின் நீட்டமும், கொடுமையும், உருவமும் கூறப்பட்டன. தீக்கும்-ஆவியை உருக்கி எரிக்கும். படம்-பாம்புப் படம் போன்ற. குழி-அல்குல். ப்ரமத்தர்- மதி மயக்க முற்றோர். ஏட்டை, விருப்பம்-ஒருபொருளிரு சொல். பாட்டன் பகை - பீஷ்மருக்கு (உள்ளப்) பகைவனை. பாட்டன் பகை...காட்சி கொடுத்தும் - பாண்டவர் பொருட்டுத் துரியோதனன் பால் தூது சென்ற போது கௌரவ சபையில் கண்ணன் காட்டிய விசுவரூப தரிசநத்தைத் திருதராட்டிரனும் கண்ணன் அருளால் கண் பெற்றுக் கண்ட மகாபாரத வரலாறு இது. பாக்கம்- திருப்புகழ் பெற்ற தலம். திருக்குவளை - திருக்கோளிலிக்கு வழங்கும் பெயர். யாக்கை யொடுக்கம் - காயம் ஒடுங்கிய தலம் - (நாகைக்) காரோணம். பார்ப்பனர் குப்பம் - அந்தணர் பேட்டை அல்லது பார்ப்பனர் சேரியா யிருக்கலாம். பூக்குண்டை-அழகிய குண்டையூர். பால் கங்கை - க்ஷீர நதி; சிக்கலில்வருவது.

129. துண்டீர தேச - தொண்டை மண்டலத்தனே! தெங்கு - தேங்காய்: செண்டாய்தம் வீச வடதேசம் சென்றாய் - மேருவைச் செண்டால் அடிக்க வடக்கே போனவனே! சமீப கும்பாபிஷேக - சமீபத்தில் கும்பாபிஷேகம் நடந்து தான.

130. ஆர் - ஆத்தி. அனிச்சம் - ஒரு மலர். தலைச்சங்காடு - சம்பந்தர் பாடல் பெற்றதொரு சிவஸ்தலம். அணவிட - பொருந்திட. கலைச்செங்கோட்டின் தவமுனி - ரிஷ்ய ச்ருங்கர்.

131. விடம் நேடி - விடத்தை விரும்பி உண்டவரை:

133. சூளிகை - உபரிகை. இணைத்த சாளிகை - ஜோடியான வண்டுகள். நிறத்த - மார்பிலுள்ள; அழகிய நிறத்தினோடு கூடிய. உலப்பு - அழிவு; முடிவு. காடவர் - ஐயடிகள் காடவர்கோன். சியத்த காடு - திருச்செங்காடு.

134. இலங்கை மன்னவன் - லங்கை மன்னனும் நரன் - ராவணன்.

135. இப்பாடல் பாடிய அத்தினத்தில் பகலுணவு அந்தக் கோயிலிலேயே அளிக்கப்பட்டது. இச்செயல் அன்று மாலை பாடிய பாடலில் 'உண்ண உணவளித்தீர்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

139. கண் அயிலார் கருடன் - கூர்மையான கண்பார்வை யுள்ள கருடன்.

142. வசை பேசினும் நீர் பொறுப்பீர் - காளமேகப் புலவர் 'கன்னபுரமாலே' எனத் தொடங்கிப் பாடியதைக் குறிக்கலாம்.

143. இப்பாடல் 'ஏக பாதம்'. கூந்தல் அழகியர் :— 1. ஆண்டாளின் கூந்தல் (மயிர்) பொருந்திய மாலையை யணிந்தவர். 2. கூந்தற் குதிரையின் வாய் பிளந்த அழகர். 3. மயிற்றேகையைத் தலையில் சூடிய அழகிய கண்ணன். 4. சௌரி ராஜப் பெருமாள். மேலும் இதன் பொருள் ஆய்ந்தறியத் தக்கது.

146. சகடம் - வண்டி உருவில் வந்த சகடாசுரன். புக்கு + அரவத்தில்-புக்கரவத்தில். அரவம்-பாம்பு. அரவம்-ஒலி.

147. விதானம் - மேல்விரிப்பு. துழாவு - (வண்டுகள் மலர் களை) ஆராய்கின்ற.

150. சனிதம்-பிறப்பு. ஜெனிதம் - பிறப்பு. மனிதன்...புநிதன்: ஒருமனிதன் தன் பிறவியை அறுத்துக் கொள்ளும் படி அவனைச் சிவமாக்கி அந்த மனிதனாலேயே பிறருடைய பிறப்பையும் களைய வல்ல புநிதனும் சிவபிரான்; அப்பர் சுவாமிகளைச் சிவபிரான் ஆட்கொண்டு பிறவியைக் களைந்து அவரைப் புகலூரில் தன்னுடன் சேர்த்துக்கொண்டதையும் குறிக்கலாம்.

151. வருடம் - மழை. பிரமனும் மாலும் தாம் தேடிக் கண்டு பிடிக்க இயலாது போனமையின் சிவபிரானை 'திருடன்' எனத் தெளிந்தனராம்.

152. கலியன் - கலிய நாயனார். முருகன் - முருக நாயனார். வலியன் - கரிக்குருவி. வலியன் வழிபட்டது திருவலிதாயத்திலும் மதுரையிலும்.

153. மெழுகு - மெழுகுதல். அலகு - அலகிடுதல். அழுகும் தொழுகும் - அழும், தொழும். எழுகும் - எழும் - எழும்பும். புழுகு - புனுகு.

155. கயவன் - கயவனாகிய என்.

156. விதுவன் - சந்திரனைச் சூடியவன். பதுமன் - பிரமன்.

157. தணர்வன் - நீக்குவன். திணர்வன் - செறிந்தவன். சிகி - அக்கினி. மால் - திருமால் அல்லது இந்திரன்.

158. இரவன் - இரப்பவன்; பிக்ஷை எடுப்பவன். இரவன் இறவா - சந்திரன் நீங்காத என்பதுமாம். குருஞானபுரவன் - குருஞான புரத்தன். குருஞானபுரம் என்பது புகலூர் போலும்.

160. நெட்டு உலாம் - நீண்ட புகழோடு கூடிய. மூர்த்தி - தெய்வ முகூர்த்தங்கள்.

161. கன உன்மணியே எனப் பிரிக்க.

163. தூளிகா மஞ்சம் - ஹம்ஸ தூளிகா மஞ்சம். சூளிகாதி - நிலாமுற்றம் முதலிய. சாளிகாதி - பணப்பை முதலிய. கேளிதம் - விளையாட்டு. பாளிதம் - சந்தநம்.

164. சித்தசன் - மன்மதன். முண்டகன் - பிரமன். பஞ்ச சடக்கர வாசகன் - பஞ்சாட்சரத்துக்கும், சடாட்சரத்துக்கும் உரியவன் - அறுமுகன் சிவபெருமானே யாதலின் ஆறெழுத்தும் அச்சிவ பிராற்கே உரியதெனக் கூறப்பட்டது. அப்பர் அடைந்த திருப்புகலூர் - அப்பர் சுவாமிகள் சிவகதி எய்திய திருப்புகலூர்.

165. ஞானக்கினியானது வினையைச் சுட்டு வீட்டின்பம் அளித்திட வெற்றி வேலால் அருளிக், கற்றவித்தைகள் பயனற்றுப் போகவும், ஆசைகள் அழியவும், வினைவெப்பம் தீர்ந்து நின்கருணையாகிய குளத்தில் மூழ்கி, நடனமாடும் மீனாட்சியம்மை, அன்பர்கட்குத் தக்கவாறு உதவும் காமாட்சியம்மை, நித்தியமான வாமாட்சி யம்மை ஆகிய தேவியர்களைப் பிரம விஷ்ணு ருத்ராதியரான சாட்சிக

ளுடன் உருவுடன் காணும் தரிசனத்தைத் தருவாய் என்றவாறு. நித்தம் - நடனம். யுத்தம் - யுக்தம் வாமம் - அழகு. அத்தபாணீச்சரர் - திருமாலாம் பாணத் தைக் கொண்டவர். அத்தம் - முகில்; மேகநிறத் திரு மால். அட்டகோணேச்சரர் - (ஒரு) பக்கத்தில் சாய்ந் துள்ளவர்; திருப்புகலூர்ச் சிவனுர் - "கோணற்பிரான்"- அப்பர் தேவாரம். அட்டம் - பக்கம். பாணுச்சுரர் - இது பாணுசுரனைக் குறிக்கலாம். பாடல் 158-இலும் 'அசுரார் உணர்பூசை'—என வந்துள்ளதால் திருப்புக லூர் பாணுசுரர் பூசித்த தலமாயிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

166. வாகீசர் அருவ காய ஆரோகணம் - அப்பர் சுவாமிகள் திருமேனி அருபமடையும்படி (இரண்டறக்) கலந்த.

167. எருத்து - கழுத்து. மருத்து - திசைகள். மருத்தணி ஈசர் - திகம்பரராம் சிவபிரான்.

169. குஞ்சரீச - தேவசேனையின் நாத. அங்கியாதி ரத்தின தாரி - இரத்தினங்கள் முதலானவை பதித்த அங்கியை அணிந்தவன். சால அழகிய......பெருமாளே - செல்வர் களின் ஆதரவில் இருக்கும் இப்பெருமானும் மிக்க செல்வந்தனுய் அநேக அழகிய ஆபரணங்கள் பூண்டு பேரழகினனுய் விளங்குவது நினைக்கத் தக்கது.

170. அக்கமணி......சேவை: பெருமானுக்கு விபூதி அலங் காரம்செய்யப்பட்டு உருத்திராக்கமாலையும் அணிவிக்கப் பட்டிருந்தது. அரித்ரம் - மஞ்சள். புரி - நகர்.

171. ஏடணை - ஆசை. கராளர் - தீக்குணத்தோர். செய்யன- செம்மை நலம் படைத்தன. கொய் - மீன்வகை.

174. அஞ்சன் - ஹம்ஸ வாகனத்தன். அல்லது அம்ஜம் என்னும் தாமரையில் பிறந்தோன். அஞ்சன், அனலூர்தி, கஞ்சன் - பிரமன்.

176. கெஞ்சுதும் - கெஞ்சுகின்றேன். கேட்பீரோ - உசாவு வீரோ.

177. களம் - கழுத்து.

178. முஞ்சன் - பிரமன். முஞ்சம் - பூணூற்பூண்டு. முனை - ஆணவமுனைப்பு.

179. இஞ்சி - மதிள்; குளம். பாற்றிடிர் - ஒழித்திடுவீர்.

180. நும் சம்மதம் ஆமோ - மேற்பாடலிற் கேட்ட வேண்டு கோளைப் பூர்த்திசெய்யாதிருப்பது தகுதியோ என்றபடி.

184. சுக்ர வ்ரதாதியர் - (முருகனை நினைந்து) வெள்ளிக்கிழமை களில் விரதம் அநுட்டிப்போர். அப்ரமெயம் - அப்ர மேயம் - அளக்க முடியாதது., அப்ரமெய அதிபத்து அழகோனே எனப் பிரிக்க. விப்ரநாராயணர் - அந்தண ராகிய திருமால். திருமாலின் சாபம் தீர்த்து விநாயகர் அருளினமையால் திருமாலுக்கு இனியராயினர்.

189. கொக்கின் கோல்-கொக்கின் இறகு. சூடி-சூடினவன்.

190. உக்க - உக - அழிய. பக்கல் பால்நீர் ஆர் சிக்கல் - சிக்கலுக்குப் பக்கத்தில் (பால்நீர்) க்ஷீர நதி ஓடுகிறது. (பாடல் 128 அடி 6-உம் பார்க்க.)

192. மைக்கண்... பூண் காட்டி : மதுரைச் செட்டிப் பெண் களுக்கு வளையிட்டு. ஐக்கம்-(லிங்கத்தோடு) ஐக்கியம்.

193. கொக்கின் - மாமரமாகிய சூரனின். கூர் - வலிமை.

194. நக்கும் பூண் - கால் விரலாலெடுத்துக் காதில் மாட்டிய (பூண்) ஆபரணமாம் குழை. பைக்கண் பார் சோலை - கண்ணுற் பார்த்தாற் பசுமை தரும் சோலை.

195. நக்கல் - இருமல். காமாரி - காளியின் பெயராற் கூறப் படும் காலரா நோய். வேம் - வேகும்; உடலை வேக வைக்கும். கைக்க - கசந்தொழிய.

197. இக்கட்டு - இடுக்கண். சிக்கல் - சிக்கு. கேசம் - கூந் தல். மாது - வள்ளி. சிட்டிப் ப்ரகார - பிரமனைச் சிறை யிட்ட காலத்துப் படைத்தல் தொழிலைச் செய்த பிரம சாத்த மூர்த்தியே! சிட்டிப்ரகார - சிருஷ்டி செய்வோ னைத் தண்டித்தவனே எனலுமாம். பிரகாரம் - பிராகாரம். செட்டி - முருகவேள்.

198. வேலஒண் கண்ணி - சக்த்யாயுதாக்ஷி; சிக்கலில் தேவி திருநாமம். பாலவண்ணன் நவநீதன் - பாலின் வெண் ணிறமுள்ள நவநீதேச்வரர்; சிக்கற் சிவபிரானின் திரு நாமம். கோடி - கொள்ளுதி. ஐயே - தலைவனே.

199. பற்குனன், விஜயன், க்ரீடி - அர்ச்சுநன். கோலவாமனர்- சிக்கலில் பெருமாள் திருநாமம். சிட்டுணு - இந்திரன்.

200. நைட்டிகம் - சுத்த பிரமசரியநிலை. நாக குண்டலி - பாம் பின் உருவமுள்ள குண்டலினி சக்தி. மத்தி - நடுவில். எழுதாட - எழுந்து ஆட. நாரதன் சொல் - நாரதர் சொன்ன பக்தி ஸூத்ரத்திற் சொல்லியுள்ளபடி. போத பஞ்சம - அறிவழக. சஷ்டி அவதார - தாமரையில்

அவதரித்தவனே. கத்த - சப்திக்க. போதரும் - ஊறி வரும். சுதை - அமிழ்து. சுதை முட்டி - அமிர்த கலசத்தைச் சார்ந்து. தோதகம் - ஜாலவித்தை, வஞ்சகம். சண்பையாளி - சம்பந்தர். பயம் - பால். பயபுட்கரணி - க்ஷீர நதி. வேல்நெடுங்கணி - சிக்கலில்தேவி திருநாமம்.

201. வாசிட்டர் - வசிட்டர். வீபத்து - சந்திரன். காகுத்த சோதரி - இராமனும் திருமாலின் சகோதரி. காபித்தம் - விளா (இலை). களநீலி - நீலகண்டத்தாள். அமை - மூங்கில். சமைந்த முகுரம் விசேடித்த கோயில் - சிக்கல் கோயிலில் மல்லிகை ஸ்தல விருட்சம். முகுரம் - மல்லிகை. நிரம்ப அழகியர் - இவர் திருப்பரங் குன்றப் புராணம் பாடியவர். இவர் வரலாற்றைச் சேய்த்தொண்டர் புராணம் பாக்கள் 2775 முதல் 2789 வரை காண்க.

203. குட்டைக் கோலவன் - கோல வாமனர். பணிமலை - திருச்செங்கோடு. பெற்றி - பெருமை.

204. மாடு இலி - செல்வமில்லாதவன். கேடிலியப்பர் என்பது கீழ்வேளூர்ச் சிவபிரான் திருநாமம்.

205. கோ - பசு; இடபம். ஆளிலை......திறமுடையான்: குண்டையூரில் சுந்தரர்க்குக் கொடுத்த நெல்லைத் தம் பூத கணங்களாலேயே ஆரூருக்குக் கொண்டுபோய்ச் சேர்த்த சிவபிரான். வேள் - மன்மதன். சேந்தன்புகழ் - கீழ்வேளூர் - முருகவேள் பூசித்த தலம். பாடல் 206-உம் பார்க்க.

206. தோமரம் - இருப்புலக்கை; கைவேல்.

207. கோளவன் - குறிக்கோளானவன். வாள் - ஒளிமிக்க. அர கை ஆட்டும் - (திருப்பாசூரில்) பாம்பெடுத்தாட்டிய. வாள் அருள் - (இராவணற்கு) வாள் தந்த. மாயவன் - மாயை வல்லோன்; சிவன். கோள் அர - விடப் பாம்பு. கீள் - கீழாடை.

208. வனமுலை மாது - கீழ்வேளூர்த் தேவி திருநாமம். நிரை விடை - ஒலிக்கின்ற இடபமாகிய. கேதியன் - கொடியினன்.

209. அருள் பூட்டருள்வான் - அருள் பூண்டருள்வான். கிஞ்சுகன் - சிவந்தவன்.

210. மாதனபால் - மாது அன்ன பால் - பெண்மை போன்ற ஒரு பாகம். போதன வூர்தியொடும் - தாமரையில் வாழும் அன்ன வாகனனும் பிரமனுடன். கேதனன் - இடத்தினன் ; வீட்டினன்.

211. நாண் - நாணுகின்ற. மைக்கண் - மை பூசிய கண். வீண்மை - வீணான தன்மை. கேண்மையன் - நண்பன்.

212. கேடயன் - பரிசையாயுதங் கொண்டவன்.

213. பாலகன் - உபமந்யு. மால் அகன் விதி - திருமாலும், அகம் பிடித்தவனான பிரமனும். மறையூர் - வேதபுரி (திருவேற்காடு). ஆனன்-இடபமேறி. கீலகன் - தந்திரக் காரன்.

215. காவாய் - காப்பாற்றுவாயாக. காவாய் - கால்வாயின் இடைக்குறை. நாவாய் - படகு. ஏறு - ஏறி. ஏகா - ஏகி-சென்று. காவாய்...நகர் போனாய்: சம்பந்தர் முள்ளியாற்றைப் படகில் கடந்து திருக்கொள்ளம்பூதூர் என்னும் தலத்தை அடைந்த வரலாறு இது. வாகா - அழகனே. நிகராத - (யார்க்கும்) ஒப்பில்லாத. வீயா - அழிந்து. நீசாதி என்பது சந்தம் நோக்கி நீசாதீ என நீண்டது. ஆடா - ஆடி. ஓடா - ஓடி. மூடா - மூடி. நீடா - நீடி. கேகா -மயில் வாகனா.

216. கயத்த - பெ . துரைத்தனேசா - அரசாண்டவனே. கெலித்த - ஜெய . கேழல் மருப்பு-பன்றிக் கொம்பு.

217. நடையேறே - ஏறுபோல் நடையனே. வேதா - பிரமா. நீசஅ மாசே - நீசா மாசே - நீசமாம் குற்றமே. கோதா-கோதை - தேவி ; மாதா - பார்வதி.

218. கேன ஆதீசர் - கேனம் முதலிய உபநிடதங்கட்கு ஈசர்.

220. விடியல்...ஆகாரன் : ஒருநாள் விடியற்காலையில், இறைவன் அழைப்பின்பேரில் சம்பந்தப் பெருமானுக்கும் தெரிவிக்காமல் அப்பர் ஸ்வாமிகள் திருவாய்மூர் செல்ல, அங்கு அப்பர் பெருமான் தன்னை யழைத்த பெருமானைக் காணாது திகைக்கப், பிறகு அப்பர் பெருமான் சம்பந்தர் இருவரும் காணச் சிவபிரான் திருவாய்மூரில் தரிசனம் தந்த வரலாறு இது. ஆகாரன் - திருவுருவத்தன். கடிய - விரைவான. மேகாரம் - தோகை. கலபி, கேதாரம் - மயில். கதிரை - கதிர்காமம். காரோணம்-காயாரோகண ஸ்தலங்கள். மாடை - மாடம்பாக்கம். (திருப்புகழ்த் தலம்). கொடி அது ஆன எனப் பிரிக்க. கால் ஆய்த - சேவலனே. காகோடி-எட்டி. காகோடி குடி - எட்டி குடி.

221. என்றுறு பேத - என்று உறுகின்ற பேதம். வேம்பதென் றிடலாது - வேம்பு என்றிடுதல் அல்லாது - அதாவது வேம்பென்றது. ஓலிட - ஓலமிட. நீந்து தண்புனல் - காவிரியாறு. காண்டவன்-இந்திரன். படை-படைத்து உடைத்தாயிருந்த. கானவர் - கற்பகக் காட்டினர் தேவர். காம்பு - மூங்கில். காஞ்சிரங்குடி - எட்டிகுடி

224. வேலை - வேளை. காவி - நீலோற்பலம். ஆவி இணைந்த- உயிர் போன்ற. கமலை - கமலாம்பாள். அரம்பை - தெய்வப் பெண். ஆல் அகடு அம்பை - ஆலிலைபோல் வயிற்று அம்பா. பாலின் நன்மொழியம்மை - திருவாய் மூர்த் தேவி திருநாமம். திருக்கோளிலித் தியாகர் திரு நாமம் - அவனிவிடங்கர்; இவர் நடநம் பிருங்க நடநம். நீலவிடங்கர் - வாய்மூர்த் தியாகராசப் பெருமான் திரு நாமம். இவரது நடநம் - கமல நடநம்.

225. திருமான் - இலக்குமியாகிய மானனையாள். கருமான் - கரிய மான். மாதோல் - யானைத் தோல். திருமால் மாயோன் - திருமான் மாயோன்.

227. நள்ளிய - விரும்பிய. வெள்ளியகிரி - வெள்ளியங்கிரி யாம் கயிலை. வெள்ளிய - வெளுத்த. வெள்ளிடை - வெளிப்படையாக. இருப்புறுவோன் அல்லது விருப்புறு வோன் எனக் கொள்க.

228. களம் கமழ் - கண்டத்தில் மணக்கும். புளங்கித - புள காங்கித. (இடைக்குறை).

229. பூங்கோயில் - இது திருஆரூர்க் கோயிலின் பெயர்.

230. அரசு - திருநாவுக்கரசர். உதரச் சூலை - வயிற்றுநோய். நாகையை யடுத்த வெளிப்பாளையத்திற் சிவபிரான் திருநாமம் அகத்தீசுரர் என்பது. திருப்பாசுரப் ப்ரபந்தம்- 'வாழ்க அந்தணர்' - பாசுரம். கடிக்கா - நறுமணச் சோலை. ககனபதி - இந்திரன். கழகமுநி - நக்கீரர்.

231. அவப்புலம்பிட - வீணான புலம்புதலைச் செய்ய. நித்தம்- நிருத்தம். அத்தநன் மன்றில் - பொன்னம்பலத்தில். தழங்க - முழங்க. சப்த விடங்க ஸ்தலங்கள்:

"சீரார் திருவாரூர் தென்நாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில்—பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்."

திருவாரூர்த் தியாகராஜப் பெருமான் தேவேந்திரனின் ஆத்மபூஜா மூர்த்தி யாதலின் மற்ற த்யாகரினும் இவரே சிறப்பானவர். ஆகத், திருவாரூரும் சத்தவிடங்கத் தலங் களுள் சிறப்புடையதாயிற்று. சத்தி துலங்க - ப்ரபாவம் விளங்க. ஒரு சத்தி - ஒப்பற்ற சக்திவேல். இரு சக்தி- வள்ளியும் தேவசேனையும்.

232. இரு வாய் - (பிறவிக்குக் காரணமான நல்வினை, தீவினை என்னும்) இரண்டு வழிகளும். தீய - அழிய. பவம் மாயின் - பிறப்பு மாய்ந்து போனல். இறவாதே-இறப்பு இல்லாமல். 'ஜெக ஆதாரப் பெருமாள்' - திருவாரூர் மூலாதாரஸ்தலம்-ப்ருதிவி ஸ்தலம். "ஆதாரத் தொளி யானே" (ஆரூர்த்திருப்புகழ் "நீதானெத்").

233. கோதாட்டு - குற்றம். மானார் - வள்ளியும் தெய்வயானை யும். ஆறு - கெடாத.

235. கோலோச்சும் அரசன் - உக்கிரபாண்டியன். அன்னை - வள்ளி.

237. எல்ல - ஒளியனே. ப - காவல் செய்கின்ற. எல் - ஒளி. அபம் - (ஒளிக்கு) எதிரான இருள். விநோதம் - ஒளி யாயும், இருளாயும் இருக்கும் புதுமை. எள்ளுறு - இகழ்ச்சிக் குற்ற. பொல்-பொல்லாததான. அபகடம்- வஞ்சகம். புல்கிய நல் - நன்மை புல்கிய (பொருந்திய). சல்லப - சல்லாபம் பொருந்திய. சல்லிய - சல் இய - ஜல் என்று ஒலிக்கின்ற வாத்யத்தோடு கூடிய. வல்லபம்-வன்மை; சாமர்த்தியம்.

243. வெந்த நீறு - சுட்ட திருநீறு. உடல் உந்த - உடலிற் பொலிய. சிந்து - கங்கையாறு.

244. நந்த - அழிய. குந்தன் - வேலாயுதன்.

245. முந்த - முற்பட.

246. சந்து - வண்டின் இசை. பொழில்மந்தம் - சோலை யில் தென்றல் வீசுகின்ற. மந்தம்-தென்றல்.

247. அந்தம் - அழகாக. புந்தி - புத்தி.

249. மந்தி - பெண்குரங்கு. பந்தி-வரிசை. தந்தி-விநாயகர்.

250. மீன்விழி - மீனாட்சிதேவி. அந்த மீன்விழி நாத, விந்துநாத எனக் கூட்டுக. தேவி விந்து, நீர் (நீங்கள்) - நாதம் எனினுமாம்.

252. ஈடுவிலி – நியாயமில்லாதவன். எடாத மாப்பொருள் – எடுக்காமல் சேர்த்துவைத்த பெருஞ்செல்வம். கோட்டி-கூட்டம். இராத ஈர்க்கிடை-இல்லையோ என்று சொல்லு மளவுக்கு ஈர்க்கைப் போன்று நுண்ணிய இடை. பார்த்திப – அரசனே. மோட்டன் – மூர்க்கன். விசை–முறை. கிராதை – வேட்டுவச்சி. கிரீடி–அர்ச்சுனன். கிலேசம்–அச்சம்; வருத்தம். கோத்திரை – மலை. வியாழ கோத்திரம்-சுவாமி மலை. வியாழம்-குரு. கோத்திரம் – மலை. சசிமகள் – தேவசேனை.

253. கமலாசனத்தன்-பிரமன். உந்தி-வயிறு. உந்திகமலாலயத்தன், விண்டு – விஷ்ணு. அருணகரம் – சிவப்பு. வருணாதி – வருணன் முதலான. சுரப்பெண் – தெய்வயானை. தெருள்நாத – தெளிவின் நாயகனே.

254. எழாத–இடம் பெயராத. இகாதபடி–அழியாத வண்ணம். வழாத – (நீதி) தவறாத. பழாத பழத்தினை நேராய் – பழுத்தல் என்ற நிலை அடையாமலே பழமானவனே (முருகர் காயறியாக்கனியாதலின்). நேராய் – நேர்வாய்.

256. பார்க்கவபுரம்-வெள்ளியங்குடி என்னும் விஷ்ணுஸ்தலம்; திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் பெற்றது. பார்க்கவி – இலக்குமி. பார்க்கவன் – சுக்ரன். பார்ப்பதி – பார்வதி.

குறிப்புரைகள் முற்றும்.

---

# அருட்புகழ் (1-10-54 முதல் 8-10-54 வரை பாடப்பெற்றவை)

## பாடல் முதற் குறிப்பகராதி (எண்கள்-பாடல் எண்கள்)

பாடல் முதற்குறிப்பகராதி முற்றும்.

(அட்டை 2-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி)

நாடிநாற் கரணத் தைம்பொறி யுடம்பில்
ஆறு தாரத் தமைதருஞ் சுடரே!
ஏழுதா துக்களை யியக்குமற் புதமே!
ஆறுசத் தியரும் ஐம்முகத் தவனும்
நான்குமூன் றிரண்டாங் கோள்களும் எழிலார்
ஒருதிரு முருகனும் உவந்திட நடஞ்செய்
ஒருசிவக் கொழுந்தே! இரண்டுமூன் றெடுநாற்
சத்திகள் ஐந்தாம் சத்திகள் ஆறும்
சத்திஐந் தெழுத்தி நான்மூன் றிருதொகை
எழுத்தி ஒருவெண் பூவார் கிழத்தி
ஒருதிரு வழுத்துமை யிருகவா னமரும்
மூவா வெழிலுறு நாற்றோட் பிள்ளாய்!
ஐம்பெரும் பூதமும் நால்வகைத் திசையும்
மூவகை யுலகும் இருவயிற் றடக்கும்
ஓருருக் கொளும்நினை ஒருசிறு வாயால்
இருகரங் குவித்தே முப்பொழு தேத்தின்
நாற்பெரு நிலையாம் முத்தியை நல்கும்
இருதிரு வடியுடை ஒருகுணக் குன்றே!
ஒருசொல் லுணர்த்தும் ஒப்பிலாக் குருவே!
இருமை நலந்தரு முத்தமிழ்ப் பயனே!
இருதலைக் கொள்ளியூ ரோரெறும் பதுபோல்
ஒருவழி யறியா திருபடு மனத்திவ்
வொருவனுக் கருள்வாய் ஒருபரம் பொருளே.

பாரி அச்சகம், சென்னை-1